# திட்டூர் தேசிகர் நூல்கள்


**சூ.இன்னாசி**

*கிறித்தவத் தமிழ் இலக்கியத் துறைத் தலைவர்*
*(ஓய்வு)*

*சென்னைப் பல்கலைக்கழகம்*



**கெவின் பதிப்பகம்**

''மரியகம்''

2, வேலவன் தெரு, மேற்குக் காமகோடி நகர்
வளவரவாக்கம், சென்னை - 600087
தொலைபேசி: 24867488

# நூல் விவரம்

நூலின் பெயர் : திட்டுர் தேசிகர் நூல்கள்

ஆசிரியர் பெயர் : சூ.இன்னாசி

முதற் பதிப்பு : 2009

பொருள் : இலக்கியம்

நூலின் அளவு : கிரவுன்

பக்கங்கள் : vi + 98

தாள் : மேப் லித்தோ

வெளியீடு : கெர்வின் பதிப்பகம்,
'மரியகம்'
2, வேலவன் தெரு,
மேற்குக் காமகோடி நகர்,
வளசரவாக்கம், சென்னை-87

தொலைபேசி : 24867488

விலை : ரூ.40.00

அச்சகம் : கவிக்குயில் பிரிண்டர்ஸ்
47, நல்ல தம்பி தெரு
திருவல்லிக்கேணி,
சென்னை - 5

# முன்னுரை

திட்டூர் தேசிகர் என்ற புலவரை அறிஞர் உலகத்தில் அறிமுகப்படுத்தியதில் எனக்கும், பங்கு உண்டு என்றாலும், அதற்குத் துணையான காலஞ் சென்ற, பேராசிரியர் யா.இயேசுதாசனுக்குப் பெரும்பங்கு உண்டு. யான் வெளியிட்ட, தற்பொழுது வெளிவரும் நூல்களையெல்லாம், கையெழுத்துச் சுவடியாக எனக்குத் தந்தவர் அவரே. மற்றொரு வகையில் கூறினால் எனக்குத் தேசிகரை அறிமுகப்படுத்தியவர் அவரே என்றால் அது மிகையில்லை.

திட்டூர் தேசிகர் தொடர்பாக மூன்று நூல்களை வெளியிட்டுள்ளேன். தற்பொழுது மூன்று நூல்களை என் எழுபத்தைந்தாம் பிறந்த நாளையொட்டி வெளியிட முன்வந்தேன். அவர் இயற்றிய நூல்களுள் சௌமியத்துறை, கிளிக்கீதை, அகப் பேய்க்கமைவு, வேத நீதி முதலிய நூல்கள், குறிப்பு விளக்கங்கள், ஆய்வு ஆகியவற்றோடு முன்னர் வெளிவந்து விட்டன. தற்பொழுது செல்லப்பிள்ளை தாலாட்டு, நன்னாட்டம் ஆகியவை தனித்தனியாக வெளியிடப்படுகின்றன. கையெழுத்துச் சுவடியில் என்னிடம் எஞ்சியிருந்த கிறிஸ்து மாலை, பூதனூர்ப் பதிகம், விக்கின விநாசர்அகவல், காலக் கொடுமை ஆகிய நான்கனையும் இணைத்துத் ‘திட்டு தேசிகர் நூல்கள்’ என்னும் தலைப்பில் வெளியிடுகிறேன்.

கிறித்தவ இலக்கியங்களை முன்னிறுத்தும் நோக்கில் நிறுவப்பெற்ற உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவையின் தலைவராகத் தொடக்கத்திலிருந்து

பணியாற்றியவர் தயானந்தன் பிரான்சீஸ் ஆவார். அவர் ஆற்றிய பேரவைப் பணிகளுக்கு நன்றிக் கடனாக, அதன் துணைத் தலைவர் என்ற முறையில் இந்நூலை அவருக்குப் படையல் ஆக்குவதில் மனநிறைவு கொள்கிறேன்.

இந்நூலைக் கணினி யச்சில் அமைத்துத் தந்த திரு.சாகுல் அமீதுக்கும், அச்சிட்ட கவிக்குயில் அச்சகத்தாருக்கும், பொருளுதவியை ஏற்றுக் கொண்ட என் பிள்ளைகளுக்கும் என்றும் நன்றியுடையேன்.

சென்னை - 87,

13.9.2009 சூ.இன்னாசி

## உள்ளே

# கிறிஸ்து மாலை

## நூல்

### காப்பு

### நேரிசை வெண்பா

துய்யகிறிஸ் தின்மாலை துய்யமனத் தோடுகற்கத்
துய்யகிறிஸ் தாவித்தாள் சொல்லரிய - துய்யகிறிஸ்
தாவி யரியதுணை அந்தாதி யுண்டுநமக்
காவி பெறுமானந் தம்

### கலிவிருத்தம்

1 எல்லா மமைத்தா யிரையிட் டணைத்தா
யெல்லா மொடுக்கி யிருபா லமைப்பா
யெல்லா யவர்க்கு மெட்டா யெற்றீ
ரெல்லா னவனே இயேசு கிறிஸ்தே!

2 வந்தாய் புரக்க மனுவா யன்பால்
வந்தாய் குணர்க்கே வழுவிற் போதம்
வந்தாய் பலனை மருவி வாழ்வாம்
வந்தாய் தலுக்கம் வழிசெய் கிறிஸ்தே!

3 பூவா ரொலிவம் புனைகா பரிநின்
பூவா ரவர்தாட் புனைந்தே சிரத்திற்
பூவா ரீனம் பொலிநன் மனுச்செய்
பூவா ரவையாள் புனித கிறிஸ்தே!

4 அன்பா னவனீ யன்பார்ப் பவனீ
யன்பா னவனீ யன்போர் பவனீ
யன்பா ளனனீ யன்பேர்ப் பவனீ
யன்பா லவையா ளன்பாங் கிறிஸ்தே!

5 ஆதி வினைதீ ரரிய செயல்க
ளாதி மனவா னந்தவ மமைய
வாதி முதலீ றமைய முடியோர்
ராதி பகவா! வதுலா! கிறிஸ்தே!

6 எட்டுக் குணனே! யெட்டாக் குணனே!
யெட்டுக் குணனே! யெட்டாக் குணனே!
யெட்டுக் குணனே! யெட்டாக் குணனே!
யெட்டுக் குணனே! யெட்டாக் கிறிஸ்தே!

7 கண்டேன் புகனீ, கரியா னுனக்கே
கண்டேன் மலரோ? கருணைக் கடலோ?
கண்டேன் மன்னா! கரையா வகமே
கண்டேன் கரைநீ காவா கிறிஸ்தே!

8 தீதார் வனமாய்ச் செறிநெஞ் சடமேப்
தீதார் வழிதீ செலறீர் சடமே
தீதார் நெறிகொற் றேற்றன் செயமீ
தீதார் நீதி திகழொண் கிறிஸ்தே!

9 மையே பெருக்கி மாமை மாய்க்க
மையே பெருக்கி மாயை செயறான்
மையே பெருக்கா மனதீப் மறவா
மையே பெருக்க வணங்க கிறிஸ்தே!

10 வாடா விழியர் மயலுட் பட்டுள்
வாடா விழியுட் புறத்தும் வழங்காய்,
வாடா வாறு வார்நெஞ் சுறுதி
வாடா முடிதாண் மாதாட் கிறிஸ்தே!

11 கண்ணே பிச்சைக் கானெஞ் சேரிக்
கண்ணே தப்பூண் டழியா காநீர்
கண்ணே படுமோ சஞ்செய் களைதாட்
கண்ணே யடைந்தேன் கண்பார் கிறிஸ்தே!

12 சூதா விக்கொட் டொல்பூ வாஸ்தி
சூதா யிறுதி துயர்தந் திரியுஞ்
சூதா யாமற் சுழலும் பழைய
சூதா னியற்கை தொலையே கிறிஸ்தே!

13 ஈசா வெழுமுன் னிடுமா விரட்சை
யீசா வகப்பேய்க் கிழிபூ விச்சை
யீசாக் குயர்பத்தி யிற்றே றிடச்செய்
யீசா னீயா ளெனையுங் கிறிஸ்தே!

14 நாடார் நாடி நாடீ தெழுந்தாய்
நாடார் குலத்து நவையிற் கனிபால்
நாடார் நசங்கை நலங்க ளுறமேல்
நாடார் பணிசெய் நாடா! கிறிஸ்தே!

15 கலியா ணக்கு ணத்தா! கடுங்குங்
கலியா னனநீ காட்டாய், தீமை
கலியா வனைத்துங் கனிந்தீ கரனீ
கலியா னெனைக்கண் காத்தாள் கிறிஸ்தே!

16 தீட்டும் வீச்சுஞ் செறியென் னெஞ்சத்
தீட்டுஞ் சோரித் தீர்த்தம் பலன்செய்
தீட்டுஞ் சுகுணஞ் செயலுங் கமழ
தீட்டும் வசனஞ் செழிவாய்க் கிறிஸ்தே!

17 ஆறா மனநோ வாற்று மாவி
யாறா கங்க ளடையு மேலா
மாறா முனைக்கை யடைகொண் டேன்வே
றாறா ருரைப்பா ரறியேன் கிறிஸ்தே!

18 சாணார் பரிவுச் சனிப்பண் ணன்னீ
சாணா ராட்சி தரைசெய் பவனீ
சாணா ருயிர்த்தா னஞ்செய் தயைநீ
சாணா வுடன்பேய் தலைதீய் கிறிஸ்தே!

19 சான்றோ ருயிர்தந் தளித்தாய் மெய்க்கே
சான்றோ ரேந்துந் தலையாய்! நீதிச்
சான்றோ னானாய் சாவைச் செயித்தாய்
சான்றோ ரடிதாள் சான்றோய் கிறிஸ்தே!

20 கூசா வறிக்கை கூற வலறிக்
கூசா வுறுமுன் கூடும்; பின்னோ
கூசா பேட்சை கூடா, தணைக்கக்
கூசா வருத்திக் கோவாங் கிறிஸ்தே!

21 சத்தாய்! சத்தாய், சத்தேன் சத்திற்
சத்தாய் விண்ணே சலிப்பற் றிலங்க;
சத்தாய் மேவார் சத்தார்; மறைபாற்
சத்தாய் வரந்தந் தருளே கிறிஸ்தே!

22 கோலா கலம்பொய் கொள்ளே னெமையீன்
கோலா! விரங்கிக் கொடுநின் சிந்தை
கோலா பங்கள் கொள்வேன் மாசெங்
கோலா! வெனையாட் கொண்டாள் கிறிஸ்தே!

23 பிள்ளாய் பாவப் பித்தென் னகமே
பிள்ளாய் பரனுன் பேரன் பென்னிற்
பிள்ளாய் வறிவு பெருக்கிப் பொருத்தை
பிள்ளாய்! நீயென் பேறங் கிறிஸ்தே!

24 கண்டி பவத்தீங் களைத்த கிடக்கை,
கண்டித் தலகை கடத்திக் காத்தாய்
கண்டி யகன்று கடக்கிற், சிலுவைக்
கண்டி கைகொள் கருணைக் கிறிஸ்தே!

25 மலையே னொதுங்க மலையா வரணீ
மலையே துன்னேர்? மலையன் பிழைதீர்
மலையே! சீனாய் மலைவே தா! மா
மலையே! ஞான மலையே! கிறிஸ்தே!

26 தாவீ தகமான் சயம்ப னே! வே
தாவீ யவனேர் தகைவிற் பத்தி
தாவீ னத்துட் டளைத்தே நடத்தாய்
தாவீ தங்கி ஷத்தாய்! கிறிஸ்தே!

27 பார்ப்பா யெனைக்கண் பலசீ வரையும்
பார்ப்பா யூட்டிப் பரிப்பா யரிய
பார்ப்பா விடுக்கண் பறத்தி யணைப்பாய்!
பார்ப்பா னலந்தேன் பார்ப்பேன் கிறிஸ்தே!

28 கோடா வாழ்விற் கூட்டாய், பகைத்துக்
கோடா வலகைக் குமைவு நீக்காய்
கோடா வமுதங் குடிகொள் காத்திற்
கோடா தணைப்பாய் கோதிற் கிறிஸ்தே!

29 மண்ணே சத்தான் மயங்கி னேனிம்
மண்ணே தோன்றி மாற்றி னாயெம்
மண்ணே! கண்ணே! மாறா விண்ணே!
மண்ணே! யகல்பின் வைப்பாய் கிறிஸ்தே!

30 அந்தாதி தியுநீ யந்தா தாநீ
யந்தா ளடைதந் தாளந் தணனீ
யந்தா ளொதுக்கி லகில முறச்செய்
யந்தா! வந்தா! வாமென் கிறிஸ்தே!

31 வாழி சதுரு ழியஞ்செய் வருணம்
வாழி யவரு ழியங்கள் வானோர்
வாழி கிறிஸ்து மார்க்க நலங்கள்
வாழி கிறிஸ்து மாலை வாழி!

# கிறிஸ்து மாலை

## விளக்கம்

### காப்புச் செய்யுள்

தூய உள்ளத்தோடு தூய கிறித்துவின்மேல் இம்மாலையைப் பாடுவதற்கு, தூய கிறித்து, தூய ஆவியோடு உம்முடைய சொல்லுதற்கரிய கிருபைகளை வணங்குகிறேன். தூய கிறித்து, தூய ஆவியோடு உலகின் ஆதியும் அந்தமுமாயிருக்கிற தந்தையாகிய உம்முடைய துணையும் உண்டு என்பதால், என் ஆன்மா மகிழ்ச்சியடைகிறது.

1 தீயின் ஒளிவடிவான இயசே கிறித்துவே! எல்லாவற்றையும் படைத்தாய்! அவ்வவற்றிற்கு வேண்டிய உணவுகளை வழங்கி அரவணைத்துக் கொண்டாய்! எல்லாவற்றையும் உமக்குக்கீழ் கொண்டுவந்து, ஆண், பெண் என்ற இரண்டாகப் பகுத்தமைத்தாய்! எல்லோருக்கும் எட்டாத எவராலும் எண்ணுவதற்கு எட்டா நிலையில் உள்ளாய்!

2 மானிடர் மீது கொண்ட அன்பால், மானிடரை மீட்க இவ்வுலகில் மானிடராய்த் தோன்றினாய்! நல்ல குணமுடையோருக்குக் குற்றமற்ற மறையருள வந்தாய்! நற்பயன்களை வாழ்வோருக்கருள வந்தாய்! நல்ல வழிகளில் நடக்கச் செய்வாய் கிறித்துவே!

3 பூக்கள் நிறைந்த ஒலிவ மரங்கள் சூழ்ந்த தோட்டத்தில் இறைவனின் பூப்போன்ற மென்மையான திருவடிகளைத் தொட்டுத் தமக்கு நேரவிருக்கும் அறிவில் பூவைப் போல் மலராதவர்களின் இழிவான செயல்களை இயலுமானால் நடைபெறாமல் தவிர்த்திடுக என வேண்டினேன் மனமலர்ச்சி பெறாத யூதர்களின் அவையிலே தனியாகக் தம் மேல் சுமத்திய குற்றங்களைத் தவிர்த்தாண்ட தூய கிறித்துவே!

4 அன்பே உருவானவன் நீ! அன்பை ஆரவாரித்து வெளிப்படுத்துபவன் நீ! அன்பானவனாக மட்டுமன்றிப் பிறர் காட்டும் அன்பை உணர்பவன் நீ! அன்பை ஆள்பவன் நீ! அன்பை ஏற்றுக் கொள்பவன் நீ! அன்பால் மக்களுள்ளங்களாகிய அவையை ஆள்கின்ற அன்பாகிய கிறித்துவே!

5 ஆதிப் பாவத்தைத் தீர்க்கக் கூடிய அரிய செயல் முதலானவை தம் மனத்தை மகிழ்ச்சி கொள்ளச் செய்ய, தம் வாழ்வின் தொடக்க முதல் இறுதிவரை அதுவே கொள்கையாகக் கொண்டதால், முள் முடியை ஏற்ற உலகத்தின் தொடக்கமாகிய இறைமகனே! மணம் நிறைந்தவனே கிறித்துவே!

6 தன்வபத்தினன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கையுணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலா ஆற்றுலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய எட்டுக் குணங்களை

யுடையவனே! மானிட அறிவுக்கு எட்டாத தன்மையுடையவனே! அன்பர்களின் அன்புக்கு எட்டுகின்ற பண்பினனே! தீயோர் நெருங்க முடியாத இயல்புடையவனே! எட்டுத் திசைகளுக்குள்ளும் உள்ளவனே! தமக்குள்ள எட்டியல்புகளையும் ஆக்கிய தன்மையுடையவனே! எள்ளளவும் எதுவும் நீயின்றி இயங்காத தன்மையுடையவனே! எங்களால் அடையமுடியாத பேரியல்புகளைக் கொண்டுள்ள கிறித்துவே!

7 உன்னைக் கண்டடைந்த எனக்குப் புகலிடம் நீயே! உனக்குச் சாட்சியாக உள்ளவன் நான்! கள்ளாகிய தேன் ஒழுகும் மலரானவனே! அருட்கடலே? கண்ணுக்குத் தேன் போன்று இனிமையாகத் தோன்றும் அரசே! என் நெஞ்சில் ஊறி என்றும் கரைந்து போகாதவனே! துன்பக் கடலில் அலைந்த நான், கரையாக உன்னைக் கண்டேன். என்னைக் காக்க வருவாய் கிறித்துவே!

8 தீமைகள் நிறைந்த காடாக உள்ள பொய்மைகள் நிறைந்த என் நெஞ்சு தீய வழிகளில் செல்வதைத் தடுப்பீராக! என் உடல் தீய வழிகளைக் கொன்று வெற்றிகண்டு தூய நெறிமுறைகளைப் பற்றித் திகழ அருள் காட்டுவாய் ஒளியாம் கிறித்துவே!

9 அழகைப் பெருக்கி மற்றவரின் அழகை மிஞ்சிவிட வேண்டும் என்ற உருவின் நிறத்தை மாற்றும் செயல் எல்லாம் மாயை எண்ணம் என்று செயல்படுபவன் இறைவன். அழகைக் கூட்ட நினைக்காத

உள்ளத்துடன், தீமைகளை மறக்காமல் உணர்ந்து விலக்க வேண்டும் என்ற சிந்தனையுடன் உன்னை வணங்க வேண்டும் கிறித்துவே!

10 மூடாமல் விழியால் மயக்கும் மயக்கத்திற்கு ஆளாகி, அவ்விழியாரோடு உள்ளத்தாலும், வெளிப்பாடு களாலும் தொடர்புற என்னை விட்டு விடாதீர்! அவர்களின் மாய வலைக்கு ஆட்படாத நெஞ்ச உறுதிகொண்டு, உன் சிறப்பு மிக்க திருவடிகளை, எவருக்கும் தாழாத என்னுடைய தலை தாழ்ந்து வணங்க ஆட்கொள்வாய் கிறித்துவே!

11 என் நெஞ்சமாகிய ஏரியில் தவறாக அணையை உடைத்து நீரை வீணாக்காமல், நல்ல வயல்களுக்குப் பாய்ச்சுவதுபோல், அவன் திருவடிகளை நான் அடைவதைக் கிறித்துவே! பாரீர்!

12 தீய ஆவியின் சூழ்ச்சியால் நிலவுலகில் சொத்துச் சேர்த்தால் முடிவில் துன்பத்தையே தரும். தீய சூழ்ச்சிக்கு நான் ஆட்படாமல், முன் பேயின் சூழ்ச்சியால் ஆதிப் பெற்றோர் பெற்ற பாவத்தைப் போல், மீண்டும் நான் பெறாமல் தொலைத்துவிடுவாய் கிறித்துவே!

13 ஆபிரகாம் செய்யவிருந்த பலிக்கு ஆளாகுமுன் அவனுக்கு மீட்பளித்த இறைவனாகிய ஈசனே! என் உள்ளத்திலிருந்து தூண்டும் பேயின் இழிவான உலக ஆசைகளுக்கு ஆளாகாமல், இறைவனாகிய

கிறித்துவே! என்னையும் ஈசாக்கை ஆட்கொண்டது போல உயர் பக்தியின் வழியாகப் பாதுகாத்துக் காத்தருள்வாய்!

14 உன்னை நாடி வராதவர்கள் மேல்நீ வைத்த அன்பால் வந்ததுபோல், நல்லவற்றை நாடாதவர்களுடைய தீமையெல்லாம் நல்லவையாக மாற வானுலகோர் உனக்குப்பணி செய்யும் நாட்டவனாகிய கிறித்துவே! அருள்புரிவாயாக!

15 சாந்தமாகிய கலியாண குணத்தைக் கொண்டவனே! தீயவனான கலியெனப் பிற சமயத்தார் கூறுவதை நீ காட்டாய்! தீமையான கலி எனப்படும் எல்லாவற்றையும் நல்லவையாகக் கனிந்து நன்மை செய்யுமாறு, தீயவனான என்மேல் கருணைக் கண் வைத்துக் காத்தாய் கிறித்துவே!

16 தீமைகளும் வீண்பேச்சுகளும் நிறைந்திருக்கிற என் நெஞ்சத் தீமைகளையெல்லாம் நீக்கித் தான் சிந்திய இரத்தத்தால் தூய்மைசெய்து நற்பயன்களைத் தரவும் நற்செயல்களைப் புரியவும் ஏற்றதாக திருவாய் மலர்ந்த கிறித்துவே!

17 தீராத மனத்துன்பங்களை யெல்லாம் தீர்க்கும் தூய ஆவி அவருடைய நெஞ்சங்களை அடையும். மேலான, மாறாத அன்புடைய உன்னை நான் அடைக்கலமாகக் கொண்டேன். வேறு யார், யார் உரைப்பர் என யானறியேன் கிறித்துவே!

18 எளிய மக்களிடம் பரிவுகாட்டிக் காப்பவன் நீ! எளியோர்கள் வழி நிலவுலகில் ஆட்சி செய்பவன் நீ! எளியோருக்காக உயிர்த்த அரிய செயலைச் செய்து அருள் புரிந்தவன் நீ! எளிய மக்களிடம் இருக்கும் பேயின் தலையை அழிப்பாய் கிறித்துவே!

19 சான்றோருக்காகத் திருவுடலை அளித்து மீண்டும் உயிர்பெற்று அருளினாய்! சான்றோர் போற்றும் தலைவன் ஆனாய்! நீதிக்கான சான்றோன் ஆனாய்! இறப்பினை உயிர்ப்பின் வழியால் வெற்றி கொண்டாய்! சான்றோர் போற்றுகின்ற திருவடிகளைக் கொண்ட சான்றோனாகிய கிறித்துவே!

20 அச்சமுறாமல் ஓசையிட்டு அறிக்கையிடுவதற்கு முன்னரே, அறிக்கையில் வேண்டுதல்கள் எல்லாம் நிறைவேறும். பின்னர் வேண்டுதல் செய்யாமல், அணைத்துக் கொள்ள கூச்சப்படாமல், ஆசைகொண்டு அருளும் அரசராகிய கிறித்துவே!

21 சத்தானவனே! சத்தைக் கொண்ட நான், சத்திக்கு மூலமான சத்தாக, விண்ணகத்தில் எப்பொழுதும் அயர்ச்சியடையாமல் விளங்கி, வேறு எச்சத்தையும் அடைய வேண்டிய நிலையில்லா வல்லமை யுடையவனே! வல்லமை நிறைந்த திருமறையின் பால், நான் பற்றுக் கொண்டு அதன் சத்தாக விளங்க வரம் தந்தருள்வாய் கிறித்துவே!

22 பொய்க் கோலாகலமாய்த் திரியேன் எமை ஈன்ற திருக்கோலம் கொண்டவனே! எங்கள் மேல் கொண்ட உன் இரக்கச் சிந்தையால் கொண்ட மனித கோலத்தை உணர்வேன். சிறந்த செங்கோலை யுடையவனே! என்னை ஆட்கொண்டு ஆள்கின்ற கிறித்துவே!

23 திருமகனே! என் உள்ளம் பாவப்பித்தாய் அலைகிறது. திருமகனே! இறைவனாகிய உன் பேரன்பினால் உன் பிள்ளையாகிய என் அறிவைப் பெருக்கி உன்னோடு ஒன்றிக்கச் செய்வாய் திருமகனே! கிறித்துவே நீ யான் பெற்ற பேறாவாய்!

24 நான் செய்த பாவங்களைக் கண்டு ஒழிப்பதற்காகத் திருச்சிலுவை மீதிருந்தாய்! என்னைத் தீமையில் கொண்டு செலுத்திய பேயிடமிருந்து என்னைப் பாதுகாத்தாய்! தீமைகளை விட்டு அகன்ற பின் நின் திருச்சிலுவையைப் பற்றிக் கொள்ள அருள்வாய் கிறித்துவே!

25 பாவ மலையைக் கொண்டிருக்கிற நான் ஒதுங்க நினைக்கும் பொழுது பாதுகாக்கத் தயங்காத அரண் நீ! கல்வாரி மலையே உனது ஏர்! பாவமலையனாகிய என்னுடைய பிழைகளைத் தீர்க்கும் கல்வாரி மலையனே! சீனாய் மலைமேல் தந்த திருமறை வேதனே! பெரிய மலையே! ஞான மலையே! கிறித்துவே!

26 தாவீதன் குடியில் தோன்றியவனே! கிறித்துவே!

தாவீதன் உள்ளத்தினான தானே தோன்றிய இறைவனே! திருமறை கூறும் தூய ஆவியின் பற்றுக் கொண்ட பத்தியில் தாவீதைப் போல என்னை நடத்துவாய்!

27 என்மீது கருணைக் கண் காட்டிப் பார்ப்பாய்! என்னைப் போலப் பல்லுயிர்களையும் பார்ப்பாய்! ஞான உணர்வூட்டிப் பாதுகாப்பாய்! எனக்கு ஏற்படும் துன்பங்களை அகற்றி என்னைப் பாதுகாத்து அணைப்பாய்! உன்னைக் கண்டடைவதற்காக அலைந்து திரிந்தேன். உறுதியாகக் காண்பேன் கிறித்துவே!

28 குற்றமற்ற கிறித்துவே! தீதற்ற வாழ்வில் உன்னுடன் ஒன்றியிருந்து, திருந்தாத பேய்க்குணத்தின் தீமைகளை என்னிடமிருந்து நீக்குவாய்! தீதற்ற இன்பம் என்னிடம் குடிகொள்ளுமாறு என்னைப் பாதுகாத்து நான் கெட்டுப் போகாமல் அணைத்துக் கொள்வாய்!

29 மண்ணில் உள்ள மனிதன் மீது பற்றுக் கொண்டவன்! அவன் மீது கொண்ட பற்றால் மயங்கி மண்ணிலுள்ள மக்களை நல்லவராக மாற்றினாய்! இம்மண்ணில் தோன்றியவனே! கண்ணானவனே! என்றும் மாறாத விண்ணவனே! மண்ணை நீக்கி விண்ணேகி என்னை வாழ வைப்பாய் கிறித்துவே!

30 அந்தமும் ஆதியும் நீயாவாய்! அழகிய தந்தையும் நீ!

அழகிய திருவடிகளைத் தந்து ஆளுகின்ற அழகிய ஒளி வடிவானவன் நீ! அழகிய திருவடிகளை விட்டுவிட்டு உலகில் இன்புமுறச் செய்வதை முடிவுக்குக் கொண்டு வருபவனே! இவ்வுலகிற்கு வந்தவனே! கிறித்துவே உன் எண்ணப்படியே ஆகுக!

31 நான்கு வகைத் தொழிலாற்றுவோர் வாழ்க! அவர்தம் பணிகள் வாழ்க! வானவன் வாழ்க! கிறித்தவ நெறியின் நன்மைகள் வாழ்க! கிறித்துவின்மேல் இயற்றப்பெற்ற நூல் வாழ்க!

## ஆய்வு

### நோக்கம்

ஒவ்வொரு நூலிலும் தேசிகர் தாம் விவிலியத்தின் எந்த வசனத்தின் அடிப்படையில் இந்த நூலைப் படைத்தேன் என்பதைக் காட்டும் வகையில், அவ்வசனத்தைக் குறிப்பிடுவது வழக்கம். அவ்வாறு இந்நூலுக்கு அவர் சுட்டியுள்ள திருவசனம் பின் வருவதாகும்.

"என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன் (பிலிப் 38)

### யாப்பு

காப்புச் செய்யுளை நேரிசை வெண்பாவாகவும், பிற 31 பாடல்களையும் கலிவிருத்தங்களாகவும் அமைந்துள்ளார். ஒவ்வொரு பாடலிலும் உள்ள நான்கடிகளின் முதல் சீர்களும் ஒன்றாகவே அமைத்த திறம் போற்றற்குரியது. ஒரே சொல்லே திரும்பத் திரும்ப நான்கு முறை வந்தாலும், வெவ்வேறு பொருள்கள் அமையுமாறு பாடியுள்ள திறம் வியப்பிற்குரியது. வேறு நூல்களிலும் இப்படி சொற்களைக் கையாண்டிருந்தாலும், நூல் முழுதும் கையாண்டிருப்பது இந்நூலில் மட்டுந்தான் என்பதால் இந்நூல் தனிச்சிறப்பிற்குரியது. மற்ற நூல்களில் கையாண்டிருந்தாலும், அச்சொல் எவ்வெப்

பொருளில் கையாளப் பெற்றுள்ளது என்பதனை ஆசிரியரே அடியில் குறிப்பிட்டிருப்பார். அப்படிப்பட்ட குறிப்பெதுவும் கையெழுத்துச் சுவடியில் காணப்படாததால் அவற்றுக்கான வெவ்வேறு பொருளைக் கண்டுபிடித்து அறிதலே தனி ஆராய்ச்சி எனலாம். எனினும் அரிதின் முயன்று கண்ட அப்பொருள்களில் மாறுபட்டோரும் இருத்தல் கூடும். அவ்வாறிருப்பாரேல், பல்வேறு பொருள்களுக்கு இடந்தருவனவாகிய சொற்களைப் பெய்து பாடிய தேசிகரின் தமிழ்ப்புலமைக்கு அவை சான்று பகர்வனவாக அமையும்.

## இறைமகன் இயல்புகள்

கிறித்துவே இந்நூலின் தலைவன் என்பதற்கேற்ப அவருடைய இயல்புகளையெல்லாம் ஆசிரியர் சுட்டுகிறார். எல்லாம் அமைத்தவன், எல்லோர்க்கும் உணவளித்துக் காத்தவன். உயிர்களை இருபாலாகப் பிரித்து வைத்துப் பெருகச் செய்தவன்! எவருடைய அறிவுக்கும் எட்டாதவன்! ஒளிவடிவானவன் என முதற் பாட்டிலேயே விளக்குகிறார். எட்டு வகையான குணங்களுடையவன். எவருக்கும் எட்டாத குணங்களைக் கொண்டவன் (6) ஆற்றல் உருவாக உள்ளவன், ஆற்றலைத் தருபவன். ஆற்றலை ஏற்பவன் திருமறையின் ஆற்றலாக உள்ளவன் (21) என்பன இறைவனின் இயல்புகளாகச் சுட்டப்படுவனவற்றுள் குறிப்பிடத் தக்கனவாகும்.

## அன்பு வடிவான்

அன்பே உருவானவன் மட்டுமன்று; மற்றவர்க்கும்

அளிப்பவன். அன்பை விரும்புபவன். அன்பால் உலகை ஆள்பவன் (4) என்று வெளிப்படுத்துகிறார். எளியவரைக் கண்டு கொண்டவன். அன்பின் இனமாக அவர்களைத் துன்பத்திலிருந்து விடுவித்துக் காப்பவன் (27) என்றெல்லாம் இறைமகனின் பேரன்பு காட்டப்படுகிறது.

## பேரருள்

எல்லா உயிர்களிடத்திலும் இரக்கம் காட்டுவது அருளன்பர்களின் இயல்பாகும். தம்முடைய பகைவருக்கும்கூடப் பரிவிரக்கம் கொள்வது பேரருளாளர்களின் உணர்வாகும். அத்தகைய பேரருளின் தலைமகனாக வாழ்ந்தவர் இறைமகன் இயேசு எனலாம். அவருடைய பேரருளின் தன்மையைச் சில பாடல்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இறைவனாகிய இயேசு மனிதனாக உருவெடுத்ததே அன்பால்தான் (2). நாடி வராதவர்களை நாடி மண்ணுலகில் தோன்றினாய்! தன்னை நாடாதவர்களுக்குத் தொண்டாற்றினாய்! (14) தான் சிந்திய இரத்தத்தை மற்றவர்க்குப் பயன்படும் புண்ணிய தீர்த்தமாக ஆக்கியவன் (16), எனியவர்களுக்குப் பரிவு காட்டிய எளியவர்களின் தலைவன் (18) என்றெல்லாம் இறைமகனைக் குறிக்கிறார்.

## நால் வருணம்

தற்காலத்தில் நால்வருணப் பிறப்பு என்பது ஏற்றுக் கொள்ளப்படாத கோட்பாடு என்பதைக் கிறித்தவர் அனைவரும் ஏற்றுக்கொள்வர். தேசிகர் காலத்தில் அவ்வளவிற்கு நால்வருண வெறுப்புத்

தோன்றியுள்ளதா என்பது ஐயத்திற்கிடமானது. தேசிகரோ, அந்த நிலையிலும் நால்வருணத்தையும் சமமாகக் கொண்டுள்ளார் என்பதனை அவருடைய இறுதிப் பாடலாக அமைந்துள்ள வாழ்த்தால் அறியலாம். நான்கு வகையினர் செய்யும் தொண்டுகள் வாழ்க என வாழ்த்தியுள்ளார்.

## செய்யுளழகு

செய்யுளில் வந்த சொல்லே மீண்டும் வருவதை மடக்கு என்றும், மடக்கணி என்றும் சுட்டுவர். அச்சொல்லுக்கு இருவேறு பொருள் அமையுமாயின் இரட்டுற மொழிதல் என்றும், சிலேடை என்றும் கூறுவர். இவரோ ஒரு சொல் நான்கடிகளாலும் மடக்காக வந்தாலும், வெவ்வேறு பொருளைத் தருமாறு அமைத்தது அவரது புலமைத் திறமாகும். எல்லா (1), வந்தாய் (2), பூவா (3), அன்பா (4), ஆதி (5), எட்டு (6), கண்டேன் (7), தீதார் (8), மையே (9), வாடா (10), கண்ணே (11), சூதா (12), ஈசா (13), நாடார் (14), கலியா (15), தீட்டும் (16), ஆறா (17), சாணார் (18), சான்றோ (19), கூசா (20), சத்தாய் (21), கோலா (22), பிள்ளாய் (23), கண்டி (24), மலையே (25), தாவீ (26), பார்ப்பா (27), கோடா (28), மண்ணே (29), அந்தா (30), வாழி (31), என்னும் சொற்கள் பாடல்களின் முதற் சீராய் அமையுமாறு பாடப்பட்டுள்ளன.

# பூதனூர்ப் பதிகம்

## நூல்

## காப்பு

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

காரண னாய்நின் றெண்ணிற் காரியசகங்க ளீன்றான்
பூரண தேவைப் போற்றிப் பூதனூர்ப் பதிகம் பாட
ஆரண நெறியூர்ந் துய்தற் கியாரயைுஞ் சேர்க்கும் நேச
வாரண விருவ ராவி மனதுவாக் கிலங்கக் காப்பாம்

### அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

1 ஆதிநூல் விட்ட தென்ன? அறுக்கும்நூல் தொட்ட தென்ன?
நீதிநூல் கடந்த தென்ன? நிலத்துநூல் தொடர்ந்த தென்ன?
ஓதிநூல் மறந்த தென்ன? உணவுநூல் உறழ்ந்த தென்ன?
பூதிநூல் புனைந்த தென்ன? பூதனூர்க் கிராமத் தாரே!

2 அறுதொழில் மகிமை எங்கே? அரற்றிய முறைக்கு மாறாய்
மறுதொழில் இயற்றல் எந்த மனுவிதி? பொருளை நாடச்

சிறுதொழில் புரிய முற்பேர் சேர்வதெங் ஙனங்கொல்?
மற்றோர்
பொறுதொழில் நுமக்கெவ் வாறாம்? பூதனூர்க்
கிாமத் தாரே!

3 மனுநெறி தவறிப் போனீர், மன்றிலோ நடிக்க லானீர்
தனுநெறிக் கடியராகி சாண்வளர்ப் பவராய்த்
தீர்ந்தீர்
இனுநெறி கூறுவோரை இகழவும் முனிவு கொண்டீர்
பொனுநெறி அறிவதேதால்? பூதனூர்க் கிராமத்
தாரே!

4 சாற்றிய நாள்கோ தானும் தழுவிய ஒருபா னெட்டும்
ஏற்றிய பிறவுந் தம்மில் இசைவிலை பல்கால் நீவீர்
மாற்றிய ஆசா ரங்கள் கரையிலை, என்றால்;
தேவைப்
போற்றிய லொன்றேன் மாறா? பூதனூர்க் கிாமத்
தாரே!

5 சூட்டிய தந்தை யாற்றான் சொலத்தகும் ஜாதி
என்றே
காட்டிய பிராம ணங்கள் கனமுழக் கிடப்பின்
னாள்கண்
நீட்டிய அன்பிற் பெற்ற நேயரை விருத்தி வர்க்கம்
பூட்டிய குடில மென்னே? பூதனூர்க் கிாமத் தாரே!

6 ஏர்பெறும் அந்த ணாளர் என்பது குடுமி நூற்கோ?
சீர்பெறும் பிறப்பொழுக்கம் சிதைந்திடில் பழுது
றாதோ?
பார்பெறும் சிறப்பு சீலம் பலவிதத் துயர்த்து மல்லால்
போர்பெறும் சனிப்பா லென்னாம்? பூதனூர்க் கிராமத்
தாரே!

7 இகழடை தொழிலை யீட்டி ஏனுகம் பழிக்குஞ்
சாலம்?
அகழடை படைவீணாக அனுப்பியென்? கிறிஸ்து
வந்தால்
திகழடை வதற்கி தேநாள், சேர்விரேல் இகபர க்கண்
புகழடை தூய ராவீர், பூதனூர்க் கிராமத் தாரே!

8 வேதமும் இறையும் மேலாம் வித்தகக் குருவும்
ஒன்றே,
பேதமும் பகையும் வீண்காண், பேசிய ஜாதி ஒன்றே,
நீதமும் பிறப்பி றப்பும் நேயமும் ஒன்றே, இம்மெய்ப்
போதமும் நடையும் கொண்மின், பூதனூர்க் கிராமத்
தாரே!

9 எட்டெனச் சொல்வீர், தீட்டெங் கிருப்ப
தென்றுணரீர் காதில்
துட்டெனக் கேட்கிலோளத் துடக்கினும் சாடிக்
கொள்வீர்,
கட்டெனப் பிறர்க்கி டங்கை காட்டுவீர் நெருப்போ
காட்டீர்

கொட்டெனத் தெளிவீர் ஞானம், பூதனூர்க் கிராமத்
தாரே!

10 சொல்லிய பிரமக் கியானி பிரமணன் தொழுவ
னோகல்?
மெல்லிய ராட்டேன்? அட்டேன்? விழவுமேன்?
பகவ னுக்கே
சல்லிய மூடர்க் காகத் தாங்குவ தெவற்றில்? தள்க
புல்லிய விம்ப தோட்டம் பூதனூர்க் கிராமத் தாரே!

## கலி விருத்தம்

வாழி சான்றவர் மாமறை யந்தணர்
வாழி சூத்திரர் வைசியர் ஏனையோர்
வாழி யேசடி யானையர் மாண்புடன்
வாழி சீர்திடுர் மாத்தமிழ் வாழ்கவே.

## விளக்கம்

எல்லாவற்றுக்கும் காரணனாக இருந்து எண்ணுகின்ற செயல்களையெல்லாம் முடித்துவைப்பவனாக இருக்கும் முழுமையான தன்மையுடைய பூதனூரில் வாழ்கின்ற இறைவனைப் போற்றி வணங்கிப் பதிகம் பாடித் திருமறை நெறியைப் பின்பற்றும் எவரையும் வானுலகில் சேர்த்துக் கொள்ள விரும்பும் தந்தையோடு இருக்கின்ற திருமகன், தூய ஆவியோடு என் மனம், வாக்கு, செயல்கள் ஒன்றக் காப்பானாக!

1. ஆதியில் இறைவனால் அருளப்பட்ட விவிலிய நூலை மறந்துவிட்டு வாழ்க்கையை அழிக்கும் பிற நூல்களைக் கையிலெடுத்த காரணம் என்ன? வாழ்க்கைக்குரிய நீதி நெறிகளைக் கூறும் நூலை விட்டுவிட்டு, இந்நிலவுலக இன்பங்களைக் கூறும் நூல்களைத் தொடரும் காரணம் என்ன? நாள் தோறும் படிக்கின்ற திருமறை நூலை விட்டுவிட்டு, இவ்வுலக வாழ்வுக்குரியவற்றைக் கூறும் நூலைத் தேடி அணைவதன் காரணம் என்ன? தீமைகளைக் கூறுகின்ற நூல்களை எழுதுவதன் காரணம் என்ன? பூதனூர் என்னும் ஊரில் வாழ்வோரே கூறுங்கள்!

2 ஓதல், ஓதுவித்தால் முதலாகிய ஆறுதொழில்களை விட்டுவிட்டு அதற்கெல்லாம் மாறான, செயல்களைச் செய்யுமாறு எந்த மனுதர்ம விதி கூறுகிறது? பொருள்களைத் தேடச் சிறு தொழில்களைச் செய்ய முற்படுவோர் எவ்வாறு

ஒன்று படுவர்? மற்றொரு பொறுமை காத்த இறைமகனின் செயலைச் செய்ய உமக்கு எவ்வாறு முடியும்? பூதனூர் என்னும் ஊரில் வாழ்வோரே கூறுங்கள்!

3 மனு தரும சாத்திரம் கூறும் எல்லோருக்கும் பொதுவான நல்ல நெறிகளைக் கைவிட்டுவிட்டுப் போலிகளாக நடிக்கத் தொடங்கி விட்டீர்கள். வில்லெடுத்துக் கொல்லும் கொடியவர்களாகி, சாண்வயிற்றை வளர்ப்பவர்களாகித் திரிகிறீர்கள். இனிமை நெறிகளைக் கூறுகின்றவரை இழித்துப் பேசும் அளவிற்கு அவர்கள்மேல் சினம் கொண்டீர். அழிந்துபோகக் கூடிய வழிகளைத் தேடுவதேன்? பூதனூரில் வாழ்வோரே கூறுங்கள்!

4 நீங்கள் சொல்லிவந்த நாள்களும், கோள்களும் பின்பற்றிவரும் பதினெட்டுப் புராணங்களும், போற்றுகின்ற பிறவும் ஒன்றற்கொன்று பொருந்தவில்லை. பலமுறை நீங்கள் மாற்றிக் கொண்ட ஆசாரங்களுக்கு அளவில்லை. ஆனால் நான் போற்றிய தேவன் ஒருவனே. அவன் என்றும் மாறாதவன் என்று உணருங்கள் பூதனூரில் வாழ்வோரே!

5 இறைவன் படைத்ததில் உயர்வாகச் சொல்லப்படுவது என் சாதியே என்று பல்வேறு நூல்களைக் காட்டி முழக்கி வந்தீர்கள். பின்னால் கண்ணால் கண்ட, அன்பின் வடிவமான இயேசு நாயகன் மறை வளர்ந்ததை அழிக்க முற்பட்ட வஞ்சகம் வெற்றி பெற்றதோ? பூதனூர் மக்களே!

6 தலைக்குடுமியை வைத்திருப்பதும், பூணூல் அணிந்திருப்பதுந்தான் அழகுடைய அந்தணன் என்பதற்கு அடையாளமோ? சிறப்புடைய பிறப்பும், ஒழுக்கமும் கெட்டுவிட்டால் இழிவு ஏற்படுமல்லவா? உலகில் பெறும் சிறப்பும் ஒழுக்கமுந்தான் பல வகைகளில் ஒருவரை உயர்த்திக் காட்டும். ஆரவாரமிட்டுத் தங்கள் பிறப்பைப் பெருமையாய்க் கூறிக்கொள்வதில் என்னவாகும்? ஒரு பயனுமில்லை பூதனூர் மக்களே!

7 இகழ்ச்சியாகச் சில தொழில்களைக் கூறிப் பழிக்கும் உங்கள் மாய வித்தையை ஒழியுங்கள்! வீணாகப் பெரும் தொண்டர் படைகளை அனுப்பிப் பொய்ச் செய்தி பரப்பி என்ன பயன்? இப்பொழுதே திருமறையைச் சேர்வீராகில் இவ்வுலக, மேலுலகங்களில் புகழ் பெற்றுத் தூய்மை யடைவீர்கள் பூதனூர் மக்களே!

8 திருமறையும் இறைவனும், எல்லாவற்றுக்கு மேலான குருவாகிய இறைவனும் ஒருவரே. பாகுபாடும் பகையும் ஒருவருக்கொருவர் கொள்வது வீணான வேலையாகும். மனிதகுலம் என்ற ஒரே சாதி தவிர வேறில்லை. ஒழுக்கம், பிறப்பு, இறப்பு, அன்பு எல்லாம் ஒன்றே. இத்தகைய உண்மையான போதனையையும் நடைமுறையையும் கொண்டு வாழுங்கள் பூதனூர் மக்களே!

9 ‘எட்டி நில்’ என்று எச்சரிக்கும் நீங்கள், தீட்டு எங்கே உள்ளது என உணரமாட்டீர்கள். காசு என்ற சொல்

காதில் விழுந்துவிட்டால் எப்பக்கமாய் இருந்தாலும் சேர்ந்து கொள்வீர்கள். கட்டுப்பாடு என்று மற்றவருக்கு இடக் கையாலே இழிவு பெறக் காட்டுவீர்! நெருப்பைக் கூட அவர்களுக்குக் காட்ட மாட்டீர்கள். உண்மை ஞானத்தை என்றைக்குத் தெளிவாக அறிவீர்கள் பூதனூர் மக்களே!

10 சொல்லிய மேலான தன்மைகளையுடைய பிராமணன் கல்லைத் தொழலாமோ? பகவானைப் போற்ற நீராட்டு ஏன்? சமையல் ஏன்? விழா ஏன்? தீய மூடர்களுக்காக இவற்றுள் எவற்றைப் போற்றுவது? இவற்றை யெல்லாம் தள்ளிவிடுங்கள்! அற்பமான பிம்பங்களையும் தோட்டங்களையும் உடைய பூதனூர் மக்களே!

## கலி விருத்தம்

சான்றோர் வாழ்க! மாமறை ஓதும் அந்தணர்கள் வாழ்க! சூத்திரர், வைசியர், ஏனையோர் வாழ்க! இயேசுவின் திருவடியார்களாகிய, வேதியர்களாகிய ஐயர்கள் வாழ்க! சிறப்புடைய திட்டுரில் வழங்கும் தமிழ் வாழ்கவே!

## ஆய்வு

### தலைப்பு

எல்லா நூல்களுக்கும் விவிலிய மேற்கோள் ஒன்றைக் காட்டிவிட்டுத் தொடங்கும் நூலாசிரியர் இதற்கு அவ்வாறு தொடங்கவில்லை. அதற்குக் காரணம் உண்டு. இந்நூல் இறைவனுக்காகப் பாடவில்லை. மக்களுக்காகப் பாடியுள்ளார். பூதனூரில் வாழும் மக்களை நோக்கிப் பாடியுள்ளார். அவர்களிடம் குடிகொண்டுள்ள பழைய சிந்தனைகளைப் போக்கிப் புதிய சிந்தனைகளைப் புகுத்த முற்பட்டுள்ளார். மக்களுக்குத் தக்க அறிவுரை புகட்டும் நூலாக அமைந்தாலும், பத்துப் பாக்களைக் கொண்டுள்மையால் பதிகம் எனப் பெயர் பெற்றுள்ளது.

### சிறந்த நூல்

தேசிகர் போற்றுகின்ற விவிலிய நூலை விட்டுவிட்டு, வேறுபல மூடக் கொள்கைகளைக் கொண்டுள்ள நூல்களை மக்கள் போற்றுவதாக எண்ணிக் கவலை கொள்கிறார். விவிலியத்தை ஆதி நூல், நீதி நூல், ஓதி நூல் என்றெல்லாம் பெருமைப்படுத்திப் பேசும் அதே பொழுதில் பிறவற்றை அறுக்கும் நூல், நிலத்து நூல், உணவு நூல், பூதி நூல் என்று சுட்டுகிறார் (1)

### இறுதி வாழ்க்கை

நால் வருணம் பற்றிக் குறிப்ட்டாலும் நால் வகுப்பினரிடையே எவ்வித வேறுபாடும் காட்டவில்லை.

பதிகத்தின் முடிவில் வாழ்த்துப் பாடும் பொழுது நால் வகுப்பினரையும் வாழ்த்துவதோடு, அவருடன் சேர்த்து இயேசுவுக்குத் தொண்டாற்றும் ஐயர்களும் வாழ்க என்கின்றார். இறுதியில் திட்டுரில் வழங்கும் "மாத்தமிழ் வாழ்கவே" என்று தமிழ் வாழ்த்தையும், தான் பிறந்த ஊரினையும் சேர்த்து வாழ்த்துகிறார்.

## ஒரே சாதி

மனித குலத்தை ஒரே சாதி என்கிற 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும் திருமத்திரக் கூற்று, திருமறையிலும் அடங்கியிருப்பதை மனத் திருத்தி,

"வேதமும் இறையும் மேலாம் வித்தகத் குருவும் ஒன்றே
பேதமும் பகையும் வீண்காண்; பேசிய ஜாதி ஒன்றே" (8)

என்று பாடுகிறார். வாழ்வும், பிறப்பும் இறப்பும் ஒன்றாய் இருப்பதுபோல மதங்கள் சுட்டும் இறைவனும் ஒன்றே என்னும் கருத்துடையவராகத் தோன்றுகிறார்.

## சாதி வேறுபாடு

சாதியடிப்படையில் தீண்டத்தகாதவர் என்ற எண்ணம் கூடாது என்பதனை வலியுறுத்துகிறார்.

"எட்டெனச் சொல்வீர் தீட்டெங் கிருப்ப தென்றுணரார்
காதில்
துட்டெனக் கேட்கிலோளத் துடக்கினும் சாடிக்
கொள்வீர்" (9)

என்று சாடுகிறார். பொய் வேடம் போடுவோரையும் நீங்களே கூறும் உண்மையான நெறிகளைவிட்டு விட்டு, மன்றத்தில் நடிக்கின்றீர் எனச் சாடுகிறார்(8). ஒருவனுக்கு அவனது தந்தை கூறாவிட்டால் தான் எந்த சாதியைச் சேர்ந்தவன் என்று தெரியுமோ என்கிறார் (5).

## சிறப்பு

ஒருவருக்கு ஏற்படும் சிறப்பு தம் ஒழுக்கத்தால் வருமன்றி வேறு வகையால் கிட்டாது. தாம் வைத்திருக்கும் தலைக்குடுமியாலோ, அணிந்திருக்கும் பூணூலாலோ அவருக்குச் சிறப்பு அமையாது. ஒழுக்கம் கெட்டுப் போனால் அவனை அந்தணர் என்று கூற இயலாது என்கிறார் (6).

# விக்கின விநாச ரகவல்

## நூல்

### காப்பு

### வெண்பா

ஆதி! யநாதி! வருவ! சொருவ! மா
நீதி! பவவிருளை நீக்குமுயர் - சோதி
பணிந்தேன் கிறிஸ்து பகவா - நின்செந்தாட்
கணிந்தேன் அணியகவற் பா.

### ஆசிரியப்பா

1 ஆதிக் காதி யநாதிக் கநாதி
நீதிக் கிடையா நெடுங்கரு ணாகர
அரூபி யான வமல சோதி
சொரூபி யாகித் தொனிகடற் பூமி
தன்னுரை போலே சாற்றிய தரிசனம்
பொன்னுரை யிசையப் புகழ்கனி மகவாய்ச்
சீர்பெற எழுந்த திருமேனி சுடர
நேர்பெற வுடுத்த நிலைவெண் ணங்கித்

தொங்க லலங்கச் சோபிதந் துலங்க
செங்க ரங்கள் சிறக்க வீசி
11 புண்ணி யஞ்செயப் புவனத் தூர்ந்த
கண்ணி யத்திருக் கழலா னடந்து
வாடு மென்மன வாட்ட மொழிக்க
நாடு மிதய நாட்டம் பலிக்க
வந்து கருணை மழைபொழி கடைவிழி
தந்து கலியெலாந் தவிர்த்துன் னததூய
ஜீவி யக்கண் சிறக்க வைப்பாய்!
பாவி எனக்குன் பஞ்ச காயக்
கோட்டைக் குள்ளே குறையா வடைக்கலம்
கேட்டைச் செயிக்கும் கிருபை அருள்வாய்!
21 மனமும் செயலும் வளம்பெற வொத்துத்
தினமும் சிலுவை தெரிசிக்க விடும்விழி
நாடொறும் சுமக்க நணுகுமென் சிலுவை
கேடொறும் குணவொளி கிளரத் தக்கதாய்
எடுத்துப் பொறையோ டிலகமுன் செல்வாய்!
மடுத்தும் பாவ வண்டலால் வருந்தும்
தீய நிலையைச் சிதைப்பாய்! மாம்சம்
மேய பதினெழு வீண்செய லழிப்பாய்!
சொல்லரும் தேவ தூயாவி நல்கும்
வெல்லரும் நவகனி மிகுந்திடக் காப்பாய்!
31 எண்படி ஏறி இதின்மே லமைந்த
ஒண்படி மூன்றும் ஒழுங்கி லேற்றிவை!
திட்ட மாயுன் சீரடிக் குள்ளுறும்
அட்ட பாக்கியம் அருளியா தரிப்பாய்!

பத்து விலக்கணம் பகரொரு நான்கும்
நித்த மென்பால் நிலவத் தயைகூர்!
பஞ்ச துர்க்குணம் பஞ்சபா தகமும்
கொஞ்ச முமெனைக் கூடா தாள்வாய்!
உள்ள மசுத்திசெய் ஒருபதின் மூன்றும்
தள்ள விரங்கித் தகுபெல னூட்டாய்!
41 வெட்ட மணைக்கு விரோத மாதி
அட்ட துர்சீலம் அடங்கலும் ஒப்பாய்
ஒவ்வா அருவ ருப்புத் திரையம்
எவ்வா தென்மேல் இறைநின் குருதி
ஆதமி லிழந்த அருஞ்சாயல் ஏழும்
ஏதமி லிறைநீ இரங்கிநன் கீவாய்!
ஏற்ற எச்ச ரிக்கைத் திரையம்
மாற்ற மின்றி மனநிலை ஆக்காய்!
உண்மை யாதி உயர்குண மெட்டும்
திண்மை யுடனே செயலில் விளங்கவை!
51 மங்கா தொளிரெக்ஷ மகிமைத் தகைமை
துங்கா கருணைசெய் துலங்க என்னுள்
ஆணி வேரோ டமைதரு செழிக்கப்
பேணி மிகுகனிப் பேறு மருள்வாய்!
துன்ப மேதருந் துர்ச்சீர் ஒன்பதும்
முன்ப னேநீ முறித்தெனை நடத்தாய்!
பொருந்திய சடுவித புருஷார்த் தங்கள்
திருத்திய ஒழுக்கனாய்ச் சிறக்கவைத் தாள்வாய்!
பாவ ஒய்வு பற்றிய ஜீவியம்
மேவ நலவலம் மெய்யனே பகர்வாய்!

61 செப்பருந் தேவபத் திக்குரித் தான
ஒப்பரும் பிரதான முற்றவி லக்ஷணம்
சாற்றும் இருபதும் சாங்கோ பாங்கமாய்
தோற்றும் கிறிஸ்தவ சுந்தர ஜீவியம்
நிலவ அருள்புரி நின்ரக்ஷை யால்யான்
குலவத் திருத்தயை கூர்!பிழை பொறுப்பாய்!
வழுவா தென்கால் மாசறக் காப்பாய்!
நழுவா நிலையில் நன்குற அமைப்பாய்!
பொறிவழி புலன்பவம் புரியா தணைப்பாய்!
நெறிவழி யாவியால் நிற்கமுன் நிற்பாய்!
71 அந்தக் கரணம் அமல வழியில்
முந்தக் கிருபை முழுதுந் தருவாய்!
தேக மிறைநின் றிருவா லயமே
யாக மீண்ட தறிந்தொழு கச்செய்!
கண்ணின் இச்சை கருத்தின் ஆசை
மண்ணின் மயக்கம் மாற்றி நடத்துவாய்!
செடியை ஒட்டிச் செழித்துக் கனிதரும்
கொடியை ஒத்த கொழுமைதந் தாள்வாய்!
உன்னுடன் சிலுவையில் உயிர்விட் டுயிர்த்தாய்!
என்னுடன் மனமும் இலங்கநன் காளாய்!
81 என்னில் நின்னுயிர் இலகவுஞ் சுத்தனாய்
உன்னில் யான்றினம் ஒழுகவுந் துணைசெய்!
பரம ரகசியம் பலதும்நன் குணர்ந்து
திரம தாயுனைச் சேவிக்க அளியருள்!
தூய ஐங்கலை துலங்கு மறையறை
நேய மெனக்கு நிலைப்படப் புரிதயை!

கண்ட மைந்துங் கதிவழி இஃதெனத்
தொண்ட ருரைக்கும் சுவிசேஷ உண்மை
தெரிந்து மயக்கந் தீர விளம்ப
பரிந்து நல்காய் பரிசுத் தாவி!

91 விக்கி னங்கள் மேவுநா ளுதவா
வக்கி ரத்துறை மயக்கந் தீர்ப்பாய்!
சிலுவைக் கொடிகீழ் தேசமெல் லாமுன்
வலுவைக் கண்டுனை வாழ்த்தருள் பொழிவாய்!
மெய்த்தே வன்னுன் மெய்யடி போற்றி
பொய்த்தே வரைத்தொழல் பொடிக்க அறிவருள்!
கோடா கோடியாய்க் கூறுல கனைத்தும்
வாடா தூட்டும் மகத்துவன் நினையே
தேடி மனுக்குலம் சீர்பெற் றோங்கிக்
கூடி இகபரம் கும்பிட்டின் புறச்செயே!

101 ஆபத் தெல்லாம் அகற்றிக் கதிக்கு
மாபத் திரமாய் வழிசெல நடத்தாய்!
முன்னே செய்பவம் முழுதும் மனிப்பாய்!
பின்னே பிழைசெயாப் பெருந்துணை இடுவாய்!
அருட்கரங் காட்டி ஆனந்தங் கொடுப்பாய்!
பொருட்கரங் காட்டிப் பூரிப்பு நல்குவாய்!
மனரம் மியமாம் மாயாச் செல்வம்
தினரம் மியனாய்ச் செழிக்க உகுப்பாய்!
குக்கிக் கிரையே கொடுக்குங் கவலையே
முக்கி யங்கொள் மூடங் கொலைப்பாய்!
நினது ராஜ்யம் நீதியும் தேடவே
மனது திருத்தியுன் மகவாய்க் கொள்வாய்!

ஒன்றே தேவையென் றுரையுன் மொழிப்படி
நின்றே மோக்ஷ் நிலமுறச் செய்குவாய்!
வேதத் துள்ளே விளங்கிய ஞான
போதத் துள்ளே பொருளெலாந் தெளிப்பாய்!
எங்கும் நீயுறை இயல்புண ராமல்
தங்கும் வீண்பயம் தவிரறி வூட்டுவாய்!
வெளியில் பகட்டி வெம்போர் விளைக்கும்
அளியில் இருதய அசுத்தம் தொடைப்பாய்!
121 உலக மேன்மைக் குழைத்திங் கிழிவாய்
கலக மீட்டுங் கடைக்குணம் தீய்ப்பாய்!
ஜீவ அப்பமும் ஜீவ பானமும்
ஆவ னிறைவுற அருந்தவைத் தாள்வாய்!
என்னை வெறுத்துன் எழிலடி பின்னே
உன்னைச் சார்ந்திங் கொழுகத் துணைநில்!
அஞ்ஞான மருட்டுக ளனைத்தையும் வென்று
மெஞ்ஞான நறவம் விளம்ப வைப்பாய்!
தத்துவ சுவிசே ஷத்தின் சாரம்
எத்துவம் பகல இயம்பரு ளீவாய்!
மாய நிஷ்டையின் வஞ்சனை யகன்று
நேய நிஷ்டை நிதஞ்செயுஞ் சீரளி!
பொய்யான யோகப் புரளிக ளொழிந்து
மெய்யான ஜெபமிடை விடாப்பழக் கந்தா!
ஆவி யுண்மையால் அழகிய திருவடி
மேவி யருச்சனை விண்ணப்ப முடித்துச்
சொல்லல் போலே சுகவழி ஒழுக
அல்லல் அகல அருள்வழி காட்டி

சத்திய வேதத் தண்ணொளி யாலே
நித்திய ஜீவ நிலவரம் காட்டி
141 ஒன்றே மூன்றும் ஓதரும் மூன்றே
ஒன்றே என்றும் உண்மை காட்டி
சீரணி நின்றாய் சிலுவையைக் குறித்தே!
ஆரணி மேன்மைபா ராட்டல் காட்டி
பழியாஞ் சுயநீதி பாராட்டல் விட்டியான்
ஒழியா உன்னீதி உறும்வழி காட்டி
ஆசை யால்வரும் அனர்த்தம் மாற்றிப்
பூசை உனக்கே புரிதல் காட்டி
தருவறு கனிவினைச் சாப மொழித்த
பொருவறு முன்னன்புப் பூரணங் காட்டி
151 தூய விரட்சையின் றுலங்குமை வளைய
ஆய பொற்சங்கிலி யநுபவங் காட்டி
மாசறு முன்மெய் மகத்துவத் தன்மையும்
ஆசறு விளக்க வதீதமுங் காட்டி
புத்தியும் யுத்தியும் பத்தியுஞ் சத்தியும்
சுத்தியுஞ் சித்தியும் முத்தியுங் காட்டி
உன்னா டாக வுன்பின் சென்றே
பன்னா ளுய்யும் பாங்கு காட்டிச்
செடியுங் கொடியுஞ் சேரைக் கியமாய்
அடிமை யுன்னி லமைநிலை காட்டி
161 அஞ்ச லளிக்குமெய் யன்பக னின்னுள்
சஞ்ச லிக்கா தமைமுறை காட்டி
நன்மை யகிதர் நடுவிலும் விளைத்துத்
தின்மை வெல்லுந் திறமை காட்டி

சத்துருக் களையுந் தாங்கிநே சித்து
மித்துரு வாக்கும் மிகுதிறங் காட்டி
ஈட்டும் பிறர்பிழை யெல்லா மறந்துநன்
கீட்டும் பழக்கங் கிருபையாற் காட்டி
இன்பதுன் பத்தி லிறைநின் சிந்தையே
என்பங் காக்கிவா ழிணக்கங் காட்டி
171 சாந்த மொழியுந் தாழ்மைகா லொழுக்கமும்
போந்த புதுளமும் பூண்முறை காட்டி
எனைவிட மேன்மையா யெவரையு மெண்ணி
உனைவிட யெவற்றையு முயர்த்தாமை காட்டி
இல்லறந் துறவற மெதுமுன் னருளிலால்
நல்லற மாகா நாணயங் காட்டி
வேதப் புரட்டர் விளம்புதந் திரங்களால்
சேதம் அணுகிடாத் திறநிலை காட்டி
மயங்கா கிறிஸ்துவ மாநிலை காட்டித்
தியங்கா வாறு தினஞ்சிறி யனையாள்!
181 தேவ தேவா! திருஅவ தாரா!
பாவ விநாசா! பரம ரக்ஷ்கா!
விக்கின விநாசா! விசுவாசர் தாயகா!
உக்கின உடல்கரைத்து உயிர்ப்பிக்கும் நாயகா!
இன்ப நாமா! இயேசு கிறிஸ்துவே!
அன்ப லங்கா ரஞ்சுட ராண்டோய்!
நீயே எனக்கு நித்திய பரவி!
சேயே னிழைத்த திரடீங் கெல்லாம்
பொறுத்தாய் போற்றி! பூண்டழி அழிவைச்
செறுத்தாய் போற்றி! தேவ பாலகனே!

191 மெய்யான தேவனே! மெய்யான மனுடனே!
பொய்யான புவியிருள் போக்குமாத் தாண்டனே!
அத்தா! சுத்தா! நித்தா! பத்தனே!
சத்தா! கர்த்தா! தானே! கோனே!
ஈசா! வாசா! நேசா! தேசனே!
கூசா தெனையாட் கொண்டோய் நமஸ்து!
செய்ய துய்ய மெய்ய னே! உனில்
உய்ய அழைத்தாள் உடையாய்! நமவே!
சரணம்! மோக்ஷம் தருவாய் சரணம்!
சரணம் சச்சி தானந்தா! சரணமே!

# விளக்கம்

## காப்பு

முடிவென்பதே இல்லாதவனே! ஆதியாய் உள்ளவனே! என்னைத் தேடி வருபவனே! அழகியவனே! சிறந்த நீதிநெறி யுடையவனே! பாவ இருளை நீக்குகின்ற உயர்ந்த ஒளியானவனே! கிறித்து பகவானே! உன்னைப் பணிந்தேன். நின் சிவந்த திருவடிகளுக்கு மாலையாக என்னுடைய அகவற்பாவைப் படைத்தேன்.

## நூல்

## இறைத் தோற்றம் (1-17)

ஆதி முதலுக்கும் ஆதி முதலானவன்! முடிவிற்கும் முடிவே இல்லாதவன்! நீதியின் இருப்பிடம்! நெடிய கருணைக் கடல்! உருவமற்றவன்! தூய்மையான ஒளி! உருவமாகி ஓசையெழுகின்ற கடல்சூழ்ந்த உலகில், தான் முன்னர்க் கூறியிருந்தது போல, புகழ்கின்ற திருக்கனியாக, குழந்தையாக, சிறப்புடன் திருமேனி ஒளிவிட, நேரிய வெண்மையான உடை அணிந்து, அதன் தொங்கலாகிய அடிப்பகுதி அழுகுடன் திகழ, செம்மையான உன் திருக்கரங்களைச் சிறப்புடன் வீசிக் கொண்டு, புண்ணியங்களைச் செய்வதற்காக இவ்வுலகில் வருவதற்குக் கண்ணியமான உன் திருவடிகளால் நடத்து, வாடிப்போயிருக்கின்ற என் மன வாட்டத்தைப் போக்கி, என் உள்ளத்தில் எழுகின்ற நினைவுகள் நிறைவுபெற, அருள் மழை பொழியத் திருவிழி காட்டி, என் துன்பத்தை யெல்லாம் தீர்த்து, உன்னதமான தூய வாழ்வு என்னில் சிறக்க வைப்பாய்!

## இறையருள் (18-42)

பாவியாகிய எனக்குள் இருக்கின்ற ஐம்புலன்களாகிய கோட்டைகள் வழியாகத் தீமைகளைப் பெறாதவாறு அவற்றை வெல்லக் கூடிய ஆற்றலைத் தருவாய்? மனமும் செயலும் ஒன்றாகச் செயல்பட்டு நாள்தோறும் நீ தொங்கும் சிலுவையை வழிபட அருள்வாய்! நாள்தோறும் நான் காணும் சிலுவையாகிய துன்பங்களை நற்குணத்தின் ஒளியால் போக்க அவற்றைப் பொறுமையோடு ஏற்கக் கூடிய உள்ளத்தைப் பெறுமாறு எனக்குமுன் செல்வாயாக! அப்படிச் செல்கையில் பாவ அழுக்கினால் எனக்கு ஏற்படும் தீமைகளை ஒழிப்பாய்! உடலாசையால் என் மேல் எழும் இன்ப உணர்வுச் செயல்களை அழிப்பாய்! சொல்வதற்கு அரிதான தேவ தூய ஆவி வழங்கிடும் வெல்லுதற்கரிய புதிய கனிகள் என்னிடம் மிகுதியாக தோன்றுமாறு காப்பாய்! யான் எண்ணுகின்றவாறு சென்று ஒள்ளிய மூவோர் இறை விரும்புமாறு என்னை உயர்த்துவாய்! நின் திருவடிகளுக்குள்ளே நான் அடைக்கமாகி அனைத்துப் பேறுகளையும் அருளிக் காப்பாற்றுவாய்! பத்துக் கட்டளைகள் கூறும் நெறிகளையும், இவ்வுலகில் கூறப்படுகின்ற அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் என்றும் நான் தழுவி நடக்க அருள்க! தீய குணங்களால் ஏற்படும் பஞ்சமா பாதங்களும் சிறிதும் என்னைச் சேராமல் பாதுகாப்பாய்! உள்ளத்தைக் கெடுக்கும் பதின்மூன்று தீய குணங்களும் என்னைச் சேரவிடாமல் நீக்குவதற்குரிய ஆற்றலை எனக்கு ஊட்டுவாய்! தூய்மையான என் உள்ளத்தில் பகையாக தீய குணங்கள் வந்து சேர விட்டுவிடாதே!

## ஈடேற்றம் (43-58)

மனத்திற்கு ஏற்காத வெறுப்புச் செயல்கள் என்னிடம் சேராமல் இறைவனாகிய உன்னுடைய திரு இரத்தம் செய்யட்டும். ஆதாம், தான் செய்த பாவத்தால் இழந்துவிட்ட அழகுச் சாயல்கள் ஏழனையும் பழுதற்ற இறைவனாகிய நீ இரங்கி எனக்குத் தருவாய்! தகுந்த முன்னெச்சரிக்கைகளை எனக்குத் திரட்டி அளித்து என் நல்ல மனநிலையில் எவ்வித மாற்றமும் ஏற்படாதவாறு செய்வாய்! உண்மை முதலான என்வகைக் குணங்களும் உறுதியாக என்னுள் செயல்பட்டுச் சிறக்க வைப்பாய்! என்னுள்ளே, மங்காத ஒளியாகிய இரட்சணிய மகிமை குறையாமல் விளங்க அருள்புரிவாய்! இரட்சணிய மரம் ஆணிவேர் பெற்று நன்கு செழிக்கச் சிறந்த கனியாகிய பேற்றினை அருள்வாய்! துன்பம் தருகின்ற தீயவையான ஒன்பதனையும் அழித்து விடுமாறு என்னை நடத்துவாய்! நல்ல வகையாகப் பொருந்துகின்ற வீர மகனுக்குத் தேவையான இயல்புகளைப் பெற்று நல்ல ஒழுக்கமுடைய தன்மையனான என்னைச் சிறக்க வைத்து ஆள்வாய்!

## தூய வாழ்வு (59-72)

பாவமின்றி ஒய்வு பெறுவதற்கான வாழ்வைப் பெறும் வழிகளைக் கூறுவாய்! சொல்லுதற்கரிய, தெய்வ பக்திக்குரிய, ஒப்பற்ற, இன்றியமையாத முழுமையான இயல்புகளான இருபதினையும் பெற்றுச் சிறந்ததாகத் தோன்றும் கிறித்தவ அழகுடைய வாழ்க்கை நிலவுமாறு அருள்புரிந்து நின் ஈடேற்றத்தைப் பெற்று வாழத் திருவருளைப் புரிவாய்! யான் செய்யும் பிழைகளைப்

பொறுப்பாய்! என்னிடம் உள்ள நடவடிக்கைகள் குற்றமறக் காப்பாய்! ஒழுக்கங்களில் நான் தவறிவிடாமல் நல்லமுறையில் என்னை அமைத்துக் காப்பாய்! மனம்போன போக்கில் சென்று, என் ஐம்புலன்கள் பாவவழியில் ஈடுபடாமல் காப்பாய்! நல்ல நெறிகளில் தூய ஆவியின் தூண்டுதலால் நிற்க வழி காட்டுவாய்! மாசற்ற வழியில் தூய வழியில் என் ஆன்மா முந்திச் செல்லுமாறு அருள் செய்வாய்!

## திருவாலயம் (73-78)

என் உடல் நீ விற்றிருக்கிற ஆலயமாம் வகையில் நான் தீமைகளிலிருந்து விலகி எழுந்து ஒழுகுமாறு செய்வாய்! கண்ணில் தோன்றும் பெண்ணாசை, கருத்தில் தோன்றும் பொன்னாசை, மண்ணாசை ஆகியவற்றிலிருந்து என்னை மாற்றி நடத்துவாய்! செடியை ஒட்டிச் செழித்துக் கனிதரும் கொடியைப் போல, உன்னை ஒட்டிக் கொழுமை பெற்றுத் திகழ அருள் செய்வாய்!

## திருச்சிலுவை (79-84)

நீ சுமந்த சிலுவையில் உயிர்விட்டு மீண்டும் உயிர்த்ததைப் போல, என்னுடைய மனமும் தீமையை ஒழித்து, மீண்டும் நன்மையில் திகழ என்னை ஆட்கொள்வாய்! என்னில் உன்னுடைய உயிர் விளங்கவும், தூய்மையுடையவனாய் உன்னோடு நான் வாழவும், துணை செய்வாய்! இறைவனின் மறைபொருள் பலவற்றையும் நன்கு உணர்ந்து அவற்றில் உறுதிபெற்று உன்னை வணங்க அருள் செய்வாய்!

## மறைபரப்புப் பணி (85-90)

தூய்மையான ஐந்து சிறப்புகளையும் பெற்றுள்ள திருமறையைப் பரப்புகின்ற வேட்கை என்னிடம் எழுவதற்கு அருள்புரிவாய்! ஐந்து கண்டங்களிலும் மக்கள் உய்வு பெறும்வழி இம்மறையே என, அடியவர்களுக்கு உரைக்கும் விவிலிய உண்மைகளைத் தெரிந்து கொண்டு, அவற்றை ஐயம் தீர எடுத்துச் சொல்லும் துணிவைத் தூய ஆவியின் வழியாக நல்குவாய்!

## சிலுவைக் கொடி (91-100)

துன்பங்கள் ஏற்படும்பொழுது உதவாத தீமையரின் வக்கிரப் போக்கின் மயக்கத்தைப் போக்குவாய்! உன் வலிமையைக் கண்டு, நாடெல்லாம் உன் சிலுவைக் கொடி பறக்க வாழ்த்தி அருள் பொழிவாய்! மெய்த் தேவனாகிய உன்னுடைய மெய்யான திருவடிகளைப் போற்றி வணங்கவும், பொய்த் தேவர்கள் வழிபாட்டை ஒழிக்கவும், அறிவையும் அருளையும் கோடிக்கணக்கில் கூறுகின்ற, உலகனைத்திற்கும் குறையாமல் வழங்குகின்ற மாண்புள்ள உன்னைத் தேடி, மனித குலம் சீர்பெற்ற ஓங்கிக் கூடி இவ்வுலகும் வானுலகும் வணங்கி இன்பமடையச் செய்வாய்!

## வான்வீடு (101-114)

துன்பங்களிலிருந்து என்னைக் காப்பாற்றி வானுலகில் பாதுகாப்பாகச் செல்லுவதற்கு வழி நடத்துவாய்! முன்னர் நான் செய்த அனைத்துப்

பாவங்களையும் மன்னிப்பதோடு, பின்னரும் நான் பாவம் எதுவும் செய்யாமல் எனக்குத் துணையாக இருப்பாய்! அருள்புரியும் உன் திருக்கரங்களால் எனக்கு மகிழ்ச்சியை அளிப்பாய்! பொருளுதவி செய்து பெருமகிழ்ச்சி தருவாய்! மனமகிழ்ச்சியடையுமாறு அழியாத செல்வத்தைப் பெற்று நாள்தோறும் மகிழ்ச்சி பெருகுமாறு செய்வாய்! வயிற்றுக்கு உணவு கொடுப்பது தான் முதற்கவலையாக இருக்கவேண்டும் என்ற முட்டாள் தனமான எண்ணத்தை அழிப்பாய்! உன்னுடைய அரசின் நீதியை நான் தேடும்படியாக, என் உள்ளத்தைத் திருத்தி உன்னுடைய பிள்ளையாக ஏற்றுக் கொள்வாய்! உன்னுடைய திருமொழிப்படி வானுலகம் ஒன்றுதான் தேவை என்று உணரச் செய்வாய்!

## இறை யுணர்வு (115-126)

திருமறையில் அடங்கியுள்ள உண்மைப் பொருள்களையெல்லாம் நான் உணருமாறு செய்வாய்! எங்கும் நீ நிறைந்திருக்கிற தன்மையை உணரமுடியாமல், என்னிடத்திலே உள்ள வீண்பயத்தைத் தவிர்க்கும் அறிவை ஊட்டுவாய்! வெளி ஆரவாரம் காட்டி கொடுமையான போரை உண்டாக்கும் செயலில் ஈடுபடும் என் இதயத்தின் தூய்மையற்ற தன்மையைத் துடைப்பாய்! உலக இன்பங்களுக்காக உழைத்துக் கலவரத்தை ஏற்படுத்தும் தீயகுணங்களை ஒழிப்பாய்! வாழ்வுக்குரிய இறையுணவாகிய அப்பத்தையும், இறைப் பானமாகிய இரசத்தையும் பெறவேண்டும் என்று ஆவல் நிறைவேற அவற்றைப் பெற வைத்துக் காப்பாய்! என்னைப் பற்றிய கவலையின்றி உன்னுடைய அழகு நிறைந்த திருவடிகளைச் சேர்ந்து நடக்கத் துணைபுரிவாய்!

## உண்மை வழி (127-134)

பொய்யான கொள்கைகளை விட்டுவிட்டு, உண்மையான கொள்கைத் தேனை உலகிற்கு வழங்க அருள்வாய்! உயர்ந்த தத்துவங்களைக் கொண்டிருக்கின்ற விவிலியத்தின் உட்பொருளை உலக முழுதும் பரப்ப அருள் தருவாய்! மாய வழிபாடுகளையும், அவற்றின் வஞ்சனைகளையும் அகற்றி, அன்பின் வழிபாட்டை நாள்தோறும் நிகழ்த்தும் சிறப்பை அளிப்பாய்! பொய்யான யோகம் பற்றிக் கூறும் சோதிடப் புரளிகளை ஒழித்து உண்மையான இறைவேண்டலாம் செபங்களை இடைவிடாமல் செய்யும் பழக்கத்தைத் தருவாய்!

## நல்வழிகாட்டி (135-180)

தூய ஆவி என்னிடம் உள்ளதால் உன்னுடைய அழகிய திருவடிகளைச் சேர்ந்து வழிபட்டு வேண்டுதல்களைச் சொல்வது போல, உடல் நலம் பெற்றுத் தீமைகள் நீங்க அருள் வழிகாட்டி, சத்தியத் திருமறையின் குளிர்ந்த ஒளி காட்டி, என்றும் உள்ள ஆன்மாவின் நிலவரம் காட்டி, ஒன்றே மூன்றாகவும், மூன்றே ஒன்றாகவும் உள்ள உண்மையையும் எடுத்துக் காட்டி, சீரணியாக நீ தேர்ந்த சிலுவையைக் குறித்துக் காட்டி, அழகிய அணியாகிய சிலுவையின் மேன்மையையும் பாராட்டிக் காட்டி, பழியாகிய தந்நலம் கருதுவதை விட்டுவிட்டு, ஒழியாத உன்னுடைய நீதிநெறிகளை நான் பெறும் வழிகளைக் காட்டி, ஆசையால் எழுகின்ற தீமைகளை மாற்றி உனக்கே வழிபாடு செய்யும் வழிகளைக் காட்டி, மரத்தின் கனியால் வந்த பாவத்தை ஒழித்து, அன்பின் முழுமையான

திருமகனைக் காட்டி, தூய மீட்பாகிய தூய பொற் சங்கிலி பெற்ற அனுபவத்தை எடுத்துக் காட்டி, குற்றமற்ற மெய்ப் பெருமையும், தன்மையும், பழியற்ற விளக்கமும், மகிமையும் காட்டி, உன்னுடைய வானுலகத்தை நான் வந்தடைய உன்பின் சென்றே உய்வுபெறும் தன்மையும் காட்டி, செடியும் கொடியும் சேர்ந்திருப்பது போல அடிமையாகிய நானும் நீயும் சேர்ந்திருக்கின்ற நிலைமையைக் காட்டி, அடைக்கலம் அளிக்கக் கூடிய மெய்யன்புடையனாகிய உன்னுள்ளே எவ்விதத் தடுமாற்றமும் இல்லாமல் நிலைத்திருக்கும் முறையைக் காட்டி, பகைவர்களையும் அன்புகாட்டி நண்பர்களாக்கிக் கொள்ளும் மிகுதியான திறமையையும் காட்டி, பிறர் செய்யும் குற்றங்களை யெல்லாம் மறந்து, நல்ல பழக்கங்களை உன்னுடைய அருளால் காட்டி, இன்பத்திலும், துன்பத்திலும் இறைவனாகிய உன்னுடைய சிந்தனையே என்னிடம் இருந்து வாழ்கின்ற தன்மையைக் காட்டி, சாந்தமான பேச்சும், தாழ்மையடையாத ஒழுக்கமும் நிறைந்த புதிய உள்ளத்தை நான் பெறும் முறையை எனக்குக் காட்டி, என்னைவிட உலகில் உள்ள எல்லோரையும் மேலானவர்களாகக் கருதும் அதே நேரத்தில், உன்னைவிட எதுவும் உயர்ந்ததில்லை என்ற நினைவை ஏற்படுத்திக் காட்டி, இல்லறமானாலும், துறவறமானாலும், உன் அருள் இல்லாவிட்டால், எதுவும் நல்லறமாகாது என்ற நிலையை விளக்கிக் காட்டி, வேதப் புரட்டர்கள் தங்களுடைய தந்திரச் செயல்களால், என்னிடம் தீமை அணுகிடாத உறுதி நிலையை ஏற்படுத்தி, பிறவற்றில் மயங்காமல், உண்மையாகிய கிறித்தவப் பற்றில் நிலையாக இருக்கும் நிலையைக் காட்டி, நான் தடுமாறி விடாமல் நாள் தோறும் சிறியவனாகிய என்னை ஆள்வாய்!

## அடைக்கலமானேன்! (181-200)

தேவாதி தேவனே! திரு அவதாரம் கொண்டவனே! பாவத்தைப் போக்கியவனே! உலகத்தை மீட்ட ஆண்டவனே! துன்பத்தைத் தொலைப்பவனே! பற்று வைப்போரின் தாயாக விளங்குபவனே! கெட்ட உடலைத் தூய்மை செய்து புதுப்பிக்கும் தன்மையனே! இன்பமான திருப்பெயரைக் கொண்டவனே! இயேசு கிறித்துவே! அன்பும் அழகும் உடையவனாய் ஒளியை ஆண்டவனே! நீயே எனக்கும் என்றும் அடைக்கலமானவன்! பிள்ளையாகிய நான்செய்த தீமைகள் அனைத்தையும் பொறுத்துக் கொண்டவனே! போற்றி! மக்களை அழிக்கக் கூடிய தீமைகளை யெல்லாம் தொலைத்தவனே! போற்றி! தேவமைந்தனே! மெய்யான தேவனே! மெய்யான மனிதனும் ஆனவனே! பொய்யான இவ்வுலகத் தீமைகளாகிய இருளைப் போக்குகின்ற சிறப்புடைய ஆண்டவனே! அத்தனே! சுத்தனே! நித்தனே! பத்தனே! சத்தானவனே! உலகைப் படைத்தவனே! தானே உருவானவனே! அரசனே! ஈசனே! வாசனே! நேசனே! தேசனே! நாணமின்றி எளியவனாகிய என்னை ஆட்கொண்டவனே! வணக்கம்! செம்மையாகிய, தூய்மையாகிய மெய்மை யாகியவனே! உனக்குள் என்னை அழைத்து ஆட்கொள்ளும் தன்மையனே! வணக்கம்! அடைக்கலமானேன்! வானுலகம் தருவாய்! அடைக்கலமானேன்! சரணம் சச்சிதானந்தனே! உன்னிடம் அடைக்கலமானேன்!

## ஆய்வு

### தலைப்பு

விக்கின விநாசர் என்றால் துன்பங்களைக் களைபவர் என்பது பொருள். இங்கு இயேசு பெருமானைக் குறிக்கிறது. ஆசிரியர் இதன் அடிப்படையான விவிலியக் குறிப்பாக விவிலியச் சங்கீதத்திலிருந்து தரும், "விக்கினங்கள் கடந்து போகு மட்டும் உமது செட்டைகளின் நிழலிலே வந்து அடைவேன்" (சங்கீதம் 51-1) என்னும் பகுதியிலிருந்து ஒருவனுக்கு வருகின்ற தீமைகளை ஒழிக்க வேண்டுமென்றால், அதற்குரிய வழி இறைவனடியில் சரணம் அடைவதேயாகும் எனப் பெறப்படுகிறது. எனவே இந்நூலின் தலைனாகிய இயேசுபிரானின் திருவடிகளைச் சார்ந்தால் எத்துன்பமும் ஒருவனை அணுகாது. தன்னைச் சார்ந்தவரைத் தீமைகள் சேராதவாறு காப்பாற்ற வல்லவன் அவன் ஒருவனே. அதனால் அவனே கதி. அத்தகைய காவற் பெருமானைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற அகவல் ஆதலின் "விக்கின விநாசர் அகவல்" எனப் பெயரிடப்பட்டுள்ளது சாலவும் பொருந்தும்.

### இறைவழிபாடு

இறைவழிபாட்டின் அடிப்படை வெற்று வாய் மொழிக் கூச்சல் இல்லை. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும் என்பதை மறைமுகமாக உணர்த்த எண்ணியிருக்கிறார் தேசிகர் எனலாம். வெற்று ஆரவார மொழிகளாகக் கூறியதெல்லாம் வீணுரை எனக் கருதவேண்டும் என்று சுட்டுகிறார் (5,6).

## இதயத் தூய்மை

வாடுகின்ற என் வாட்டம் போக்க என் இதயம் இறைவனை நாடவேண்டும் என்கிறார் (13,14). ஐந்து வகையான தீய குணங்களும், ஐந்து பாதகங்களும் என்னை நெருங்காமல் செய்ய வேண்டும் (37,38) என்று வேண்டுவதன் நோக்கம், உள்ளம் தூய்மை பெற்றிருந்தால் உடலின் எப்பகுதியும் தீச்செயலில் ஈடுபடாது என்பதால்தான். உள்ளம் மாசுபடாமல் இருக்கவேண்டிய உறுதியை எனக்கு அளிப்பாய் என வேண்டுகிறார் (39,40).

## வாக்கு

என்னுடைய வாக்கு எப்பொழுதும் உன்னுடைய விவிலியத்தின் உண்மைகளை எடுத்துக் கூறும் அருள் செய்வாய் (129,130). உண்மையான வேண்டுதலை இடைவிடாமல் செய்யும் பழக்கத்தைக் கொடுப்பாய் (134) நூலின் இறுதிப் பகுதியில், "தேவாதி தேவா! திரு அவதாரா! பாவத்தை அழிப்பவனே! விண்ணுலகிற்கு எம்மை மீட்டவனே! தீமையைத் தொலைப்பவனே! பற்றுறுதியின் பிறப்பிடமே! தளர்ந்த உடலைப் போக்கி உயிர்ப்பித்து உறுதியை அளிப்பவனே! இன்பத் திருப்பெயரைக் கொண்டவனே! இயேசு கிறித்துவே!" என வாயார இறைவனை வாழ்த்துவதன் வழியாகத் தம் வாக்கின் வழி இறைவனைப் போற்றுகிறார் (181-185).

## மெய்

ஐம்புலன்களிலும் உடல் முழுவதையும் ஒன்றாக இணைத்துக் கூறும் பொழுது 'மெய்' எனச் சுட்டுவர். மெய்யில் ஐம்புலன்களும் அடக்கமாகும். ஐம்புலன்கள்

வழியாகப் பாவங்கள் புரியாமல், தூய ஆவியைப் பெற்றுத் திகழ அருள்வாய் (69,70) என்றும், அந்தக் கரணம் எனப்படும் ஐம்புலண்கள் தூய்மையான வழியில் நடக்க அருள் செய்வாய் (71,72) என்றும், உன் திருவாலயமாக என் உடல் ஆகுமாறு செய்வாயாக (73,74) என்றும் பாடுகிறார்.

## கண்

மெய்யின் உறுப்புக்கள் ஒவ்வொன்றும் இறைவனில் ஈடுபாடு கொள்ள வேண்டும் என்பதில் கருத்தைச் செலுத்தியுள்ளார் தேசிகர். கண், கண்டவாறு அலை பாயாமல், மண்ணில் உள்ள மயக்கத்தைப் போக்கி உன்மேல் கருத்து வைத்துச் செயல்படச் செய்வாய் (75,76) என்கிறார். அருள்மழை பொழிந்து, கடைக்கண் காட்டித் துன்பங்களைப் போக்கி என் வாழ்வின் உண்மைக் கண்களைச் சிறப்புறச் செய்வாய்! (15,16,17) என்கிறார்.

## பண்புகள்

இந்நூலின் இறைவனின் பண்புகளை எண் தொகையால் விளக்குகிறார். இந்த அளவிற்குப் பிற நூல்களில் எண் தொகையைக் குறிப்பதாகத் தோன்றவில்லை. பஞ்ச காயக் கோட்டை (18,19), எண்படி ஏறி (31), அட்ட பாக்கியம் (34), பத்து இலக்கணம் (35), பஞ்ச துர்க்குணம், பஞ்ச பாதகம் (37), உள்ள மசுத்தி செய் ஒருபதின் மூன்று (39), அட்ட துர்சீலம் (42), உயர்குணம் எட்டு (49), துர்ச்சீர் ஒன்பது (55), சாற்றும் இருபது (63), கண்ட மைந்து (87) என்று எண் தொகையைப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுக்கான விளக்கங்களை நூலின் அடிக்குறிப்பாகவோ,

விளக்கமாகவோ தரவில்லை. அவற்றுக்கான விளக்கங்களைத் தமிழறிஞர், இறையியல் வல்லுநர் அவரவர் அறிவுக் கேற்றாற் போல விரித்துக் காண இடம் தருவதாக உள்ளது. எண்படி ஏறி என்பதில் (31) உள்ள எட்டு யாவையென ஐயம் எழக்கூடும். அறத்தின் தன்மைகளான ஐயப்படாமை, உலக விருப்பின்மை, எவர்மீதும் வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழியின்மை, அழிந்தோரைத் தூக்கி நிறுத்தும் தன்மை, அறங்களை விளக்குந்தன்மை, உயிர் எல்லாவற்றிலும் பேரன்புடைமை ஆகியனவாம். இவற்றைப் பற்றிக் கொண்டு, உம்மை என்றும் இறைமை, இம்மை, மறுமையாகிய படிகளில் முறையாக, ஏறிச்சிறக்க என்னும் பொருளை எல்லோராலும் எளிதில் விளங்கிக் கொள்ள இயலாது. அதுபோல் அட்டபாக்கியம் (34) என்பதற்கு இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை ஆகிய எட்டுச் செல்வங்கள் எனப் பொருள் காண வேண்டும். பத்து இலக்கணம் என்பதற்கு (35) மெய்யுரை, நல்வார்த்தை, இனியவை கூறல், பயன்படு சொல் ஆகிய வாக்குக் குணங்களையும், கோயில் வலம்வரல், தவம் புரிதல், தானம் செய்தல் ஆகிய மூன்றும் காயம் என்னும் உடற்குணங்களையும், அருள் நினைவு, ஆசை அறுத்தல், தவப்பற்று ஆகிய மூன்றும் மனம் தொடர்பான குணங்களையும் குறிக்கும். அதே அடியில் வரும் நான்கு என்பதற்கு, ஆண்களென்றால் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி எனவும், பெண்கள் என்றால் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனவும் கொள்ள வேண்டும். இவ்வாறு தொகைக் குறிப்புகளை உணர நிகண்டுகள், இலக்கணங்கள் அவற்றுக்கான உரைகள் ஆகியவற்றின் பயிற்சி தேவை. இவற்றைக் கொண்டு தேசிகரின் இலக்கண அறிவும், நிகண்டுகளில் உள்ள பயிற்சியும் தெரிய வருகின்றன.

## உவமைகள்

சித்தர்களைப் போல மருத்துவ அறிவும் நிறைந்தவராதலால், செடி கொடிகள் பற்றிய தன்மையும் நுணுக்கமும் அவரிடம் இயல்பிலேயே இருந்தது. செடியை ஒட்டிக் கொடி இருப்பின் மிகுந்த பயன்தரும் என எண்ணி,

"செடியை ஒட்டிச் செழித்துக் கனிதரும்
கொடியை ஒத்த கொழுமைதந் தாள்வாய்" (77, 78)

என்கிறார். பிறிதோரிடத்தில் இறைவனோடு தான் ஒன்றித்திருக்க எண்ணும் பொழுது

"செடியுங் கொடியுஞ் சேரைக் கியமாய்
அடிமை யுன்னி லமைநிலை காட்டி" (159, 160)

என்று பாடுகிறார்.

## எதுகை நயம்

செய்யுட்களில் ஓசைக்கு நயம் கூட்டுவது எதுகையாகும். இவருடைய 'சௌமியத்துறை' நூலில் அதிகமான பகுதிகளில் எதுகை நயங்கள் காணப்படுகின்றன. இச்சிறிய நூலிலும் ஆங்காங்கு எதுகைச் சொற்கள் அமைந்து சுவை கூட்டுகின்றன. அதற்குச் சான்றுகளாகப் பின் வருவனவற்றைக் கொள்ளலாம்.

“புத்தியும் யுத்தியும் பத்தியும் சத்தியும்
சுத்தியும் சித்தியும் முத்தியும் காட்டி” (135, 136)

“அத்தா! சுத்தா! நித்தா! பத்தனே!
சத்தா! கர்த்தா! தானே! கோனே!” (183, 184)

## சொல்லாட்சி

கவிதையின் ஆற்றல் அதில் பயன்படுத்தப்படும் சொற்களைக் கொண்டே சிறக்கும். ஒருவர் தாம் பார்க்கும் பணியிலிருந்து முதிர்ந்த வயதில் ஓய்வு பெறுகிறார். அவ்வாறு ஓய்வு பெற்றதின்பின் வேலைச் சுமை குறைவதைப் போல உடல் நலமும் குறையும். ஆனால் அவ்வயதில் உடல் வளமும் மிகவும் தேவையாகும் என்பதை எண்ணி,

“பாவ ஓய்வு பற்றிய ஜீவியம்
மேவ நலவளம் மெய்யனே! பகர்வாய்! (59, 60)

என வேண்டுகிறார். இதில் வரும் ‘பாவ ஓய்வு’ என்னும் தொடர் புதுமையானது. பொருள் பொதிந்தது. ஓய்வு பெற்றபின் இளமை மீண்டும் வராது. அதேபோல் ஒழித்து விட்டபாவம் மீண்டும் தலையெடுக்கக் கூடாது என்ற பொருளில் ‘பாவ ஓய்வு’ என்கிறார். இவ்வாறே “......... பூண்டழி அழிவை” (189) என்னும் தொடரில் முதலில் வரும் ‘அழி’ பெயரெச்சமாகவும், பின்னர் வரும் அழி பெயராகவும் அமைத்துப் பாடியிருப்பது அவரது இலக்கண அறிவைக் காட்டும்.

# காலக் கொடுமை

## நூல்

## காப்பு

### குறள் வெண்பா

காலக் கொடுமையினைக் கண்டுணர்ந்துன் சீர்பொருந்த
சீலக் கடவுடுணை செய்

### எண்சீர் விருத்தம்

1 சத்திய மறைமீறி நடக்க லாச்சு
சந்தேகத் துருக்கமுன்னி ஏற லாச்சு
நித்திய அனுஷ்டனாந் தவற லாச்சு
நீசரின் துர்ச்சங்கத்தில் சேர்கை யாச்சு
எத்திய பேய்வழியே உருசி யாச்சு
இயேசுகிறிஸ் திறைநாமம் அருகி யாச்சு
கத்திய ஏச்சுகளே போதிப் பாச்சு
கற்றறிவில் லாக்காலக் கொடுமை தானே!

2 தாழ்வான தற்பிரியம் சிரேஷ்ட மாச்சு
தனில்நிறையாப் பணப்பிரியம் குரங்காட் டாச்சு
கீழ்வான வீம்பகந்தை பெருக்க மாச்சு
கீழ்ப்பணிவைங் குரவர்முனம் அசட்டை யாச்சு
தீழ்வான தூஷணைகள் கொண்டாட் டாச்சு
செய்தநன்றி எண்ணுவதும் முயற் கோடாச்சு
காழ்வான பகைமுற்றி யுத்த மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

3 பரிசுத்த மில்லாத நடக்கை யாச்சு
பழுதியற்கை யன்பில்வே றுக்க லாச்சு
தெரிசுத்த மறைத்தசுத்த முரைக்க லாச்சு
செழிஇணக்க முனைந்தவ தூறியம்ப லாச்சு
நரிசுத்த மறைகதை போலுணவு மாச்சு
நல்லோரைப் பகைப்பதுவே விரத மாச்சு
கரிசுத்த மிடல்போலா சார மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமைதானே!

4 குடிப்பதுவே பஜனைச்ச மாஜ மாச்சு
கூத்தாட்டும் பார்ப்பார்க்கோர் தொழிலென் றாச்சு
அடிப்பதுவே கரமமைந்த நோக்கென் றாச்சு
அகதிகளுக் கிடவோகை முடமென் றாச்சு
நொடிப்பதுவே ஆசார மொழியென் றாச்சு
நோன்பெல்லாம் பெருந்தீனி தின்ப தாச்சு
கடிப்பதுவே சோதரசி நேக மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

5 சீர்மைபெறுங் கற்புநெறி சிதைய லாச்சு
தீமைதரும் இச்சைவழி ஓட லாச்சு
நேர்மைபெறும் மனோதருமம் நெகிழ்பா டாச்சு
நீசதுணி கரமிறுமாப் புச்ச மாச்சு
ஆர்மைபெறும் மனத்திருத்தி எங்கோ போச்சு
அலைந்துலைந்து பிறர்தனமிச் சிப்பே யாச்சு
கார்மைபெறுங் களவுகொலை மிகுக்க லாச்சு
கற்றறிவில் லாக்காலக் கொடுமை தானே!

6 நலங்கிளருந் தேவபத்தி குறைச்ச லாச்சு
நாடகிபோற் றினவேஷந் தரிக்க லாச்சு
பலங்கிளரும் அன்புநிலை வெறுக்க லாச்சு
பாஷண்டம் நாஸ்திகமே பாட மாச்சு
குலங்கிளரும் சுவிசேஷம் தள்ள லாச்சு
கூத்தாட்டும் களரியுமே நாட்ட மாச்சு
கலங்கிளரும் மிர்த்தெனநற் போதிப் பாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

7 கோமட்டித் தனமேகுல விருதென் றாச்சு
கூடாநட் பேயதிகம் பிரீதி யாச்சு
பூமட்டி யாயலைந்தூண் புசிப்ப தாச்சு
பொருளொன்றே கருதிநாணி ழக்க லாச்சு
ஓமட்டி எனல்வரிசை யளிப்பென் றாச்சு
ஒழுக்கமெனல் பாழ்வீட்டி னொழுக்கென் றாச்சு
காமட்டித் தனங்கள்கணக் கிறந்த தாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

8 கோ.லத்தைக் கொண்டடிசு ளென்க லாச்சு
குணப்படுத்தும் குருமாரை வைவ தாச்சு
சீலத்தை வருத்துகவி மறக்க லாச்சு
தென்பாங்குஞ் சிந்துகளும் சிறக்க லாச்சு
தூலத்தை வளர்ப்பதுவே தொழிலென் றாச்சு
சோதிடமந் திரங்குறிகள் விரும்ப லாச்சு
காலத்தைக் குறைசொலிவீண் போக்க ·லாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

9 பண்டுள்ள நலங்கள்பல விடுக்க லாச்சு
பாவச்சார் புள்ளபல எடுக்க லாச்சு
முண்டுள்ள கட்டாயம் விதவைக் காச்சு
முதிர்விதுரன் சிறவிமணம் முடிக்க லாச்சு
தொண்டுள்ள முற்றியற்றா வணக்க மாச்சு
சுவாமியெனச் சுருவங்கள் பணிய லாச்சு
கண்டுள்ள படிபகர்வோர் பகைவ ராச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

10 வித்தியா கெருவங்கள் மிகுந்து போச்சு
விளம்பசுய பாஷையில்வாக் கிலையென்றாச்சு
சத்தியா ராதனையே மோக்ஷ் மாச்சு
தலைமறந்த தர்க்கமே வேத மாச்சு
சித்தியா அத்துவைதம் பார்வை யாச்சு
ஜெயித்தோமேற் கெல்லைஎன்று நடிக்க லாச்சு
கத்தியார்ப் பரித்தல்தெருப் போதிப் பாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தோனே!

11 ஞானரைப்போற் பலவாய்ப் பேச லாச்சு
நடக்கைமுழு விபரீத மான தாச்சு
ஈனரைக்குரு வெனக்கொண் டாட லாச்சு
ஏற்றபோ தகருரையைத் தள்ள லாச்சு
ஊனரைத் தேவரெனப் பணிய லாச்சு
ஒருதிரியே கப்பொருளை முனைத லாச்சு
கானரை மயக்குநற்கே கால மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

12 குருமாரை ஏய்த்துவித்தை கொள்ள லாச்சு
கொண்டபின்னர் அவரைநிந்தை செய்ய லாச்சு
குருமாரை ஏய்த்துமேற் போக லாச்சு
குருமார்சொல் பின்னவர்க்குக் குயட்ட லாச்சு
குருமாரை ஏய்த்துப்பணம் பிடுங்க லாச்சு
கொழுப்புவந்த பின்பவரைக் குரைக்க லாச்சு
குருமாரைக் காண்பதற்கும் கூச்ச மாச்சு
கற்றறி விலாக்காலக் கொடுமை தானே!

13 பூமியிலே சாண்வயிறே தேவென் றாச்சு
புண்ணியத்தைத் தேடுவதும் மருந்தே யாச்சு
நாமியிலே திருத்திகொண்டு பேற லாச்சு
நன்னடக்கை சண்டிகளால் நகைப்ப தாச்சு
நேமியிலே துட்டருக்கே முடுக்க மாச்சு
நீதிமான் களுக்குமிக வாட்ட மாச்சு
காமியிலே காளைகளின் நாட்ட மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

14 உந்தியா நாதனையே உயர்த்தி யாச்சு
உன்னதனைத் தொழுவதுவோ தாழ்ச்சி யாச்சு
பந்தியா னதுமதுவே எங்கு மாச்சு
பரிகாசப் பாட்டேதே வார மாச்சு
நிந்தியா நிலைகானற் சலமே யாச்சு
நிமலவழி நிற்பதுவோ இகழ்ச்சி யாச்சு
கந்தியா உரையாட்டே எவர்க்கு மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

15 ஆதாரம் வியாசமாய்ச் செய்ய லாச்சு
அபகாரம் உபகாரத் தியற்ற லாச்சு
தீதார நடபபதுவே சிந்தை யாச்சு
திருடருக்குச் சிவாரிசு லகுவி லாச்சு
நாதாரக் கற்புவிற்றுப் பிழைக்க லாச்சு
நாய்களைப்போல் எலும்புநக்கிக் களிக்க லாச்சு
காதாரக் கேட்டமதி விழனீ ராச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே

16 பாதிரிமார் செய்தநன்றி மறக்க லாச்சு
பாதகரென் றவர்பெயரைப் பழிக்க லாச்சு
மாதிரிமார் எதிர்க்கடைகள் வைக்க லாச்சு
வகையின்றி முகம்வெட்கிப் புலம்ப லாச்சு
சோதிரிமார் ஏமாற்றித் திரிய லாச்சு
சூனியம்மந் திரவாதம் பண்ண லாச்சு
காதிரிமார் போற்சேஷ்டை செய்ய லாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

17 மாடுதின்போன் பறையனெனப் பழிக்க லாச்சு
மறைவிருந்து முழுமாடே தின்ப தாச்சு
பூடுதின்போன் கடல்கடந்தூன் அருந்த லாச்சு
புலைதீரக் கௌவியஞ்சூ டேற்க லாச்சு
ஆடுதின்போன் எக்கியமென் றேய்க்க லாச்சு
ஆசையுற்றோர் அறுத்தாடும் புசிப்ப தாச்சு
காடுதின்போன் போல்மதங்கொண் டலைய லாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

18 உடன்பட்டுப் பின்மீறி நடக்க லாச்சு
உத்தியோகம் பெறச்சாலம் போட லாச்சு
திடன்பட்டுக் கிழவிசொற் கேட்க லாச்சு
சிந்தைகொண்ட மேற்கறிவும் மூட மாச்சு
மடன்பட்டு மதிவாழக் கஷ்ட மாச்சு
மாட்சியற்ற புராதனக்கோள் வழக்க மாச்சு
கடன்பட்டுச் சுகிப்பதுவே சகஜ மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

19 விண்ணிலே மனஞ்செலுத்தல் வீணென் றாச்சு
வீம்புரைக்கும் நாஸ்திகமே கோட்பா டாச்சு
மண்ணிலே சுகம்நிலையென் றுழல லாச்சு
வாதாட்டில் வைவதுவே திறனென் ராச்சு
எண்ணிலே நிகரிலமென் றிறுமாப் பாச்சு
எழுத்துசில பெயர்சேர்த்துக் குனிப்ப தாச்சு
கண்ணிலே கண்டதெலாந் தெய்வ மாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

20 நில்லாத ஆக்கையிலே முறுக்க மாச்சு
நிலையான ஆவியிலே தளர்ச்சி யாச்சு
பொல்லாத மனுக்கள்சதி எண்ண மாச்சு
போக்கிரிகள் சண்டிகட்குச் சாக மாச்சு
சொல்லாத துறைகளெல்லாம் புழக்க மாச்சு
சோம்பியிருந் துண்பதுவே தொழிலென் றாச்சு
கல்லாத மூடர்குலக் குருக்க லாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

21 பாத்திரம் சீர்தூக்காப் பிச்சை யாச்சு
பார்ப்பார்க்கும் பொய்மனுநூற் சாக்கே யாச்சு
சாத்திரம் பலவீணாய்க் கதைக்க லாச்சு
சதுர்வேதச் சபைகூடி மிரட்ட லாச்சு
தோத்திரம் கல்லுருமுன் சொல்ல லாச்சு
துஷ்டைகளின் தீரடனம் கண்ணின் பாச்சு
காத்திரத் தேவமறை கசப்பென் றாச்சு
கற்றறிவி லாக்காலக் கொடுமை தானே!

22 கிறிஸ்துவ நன்றிமறந் தேசுங் காலம்
கெர்வமுற்று பத்திரிகை போடுங் காலம்
கிறிஸ்தவ நன்முயற்சி தடுக்குங் காலம்
கேவலமாய்த் தெருநின்று பழிக்குங் காலம்
கிறிஸ்துவ கொழுப்பையுன்னா துளறுங் காலம்
கிடைத்தநல் லரசாட்சி யுணராக் காலம்
கிறிஸ்தவ சமாதானம் மதியாக் காலம்
கெட்டகா லமிதனை என்சொல் வேனோ?

23 இயேசுபரன் அருள்மீட்பை ஏற்காக் காலம்
எம்பெருமான் திருநாமம் இகழுங் காலம்
இயேசுபரன் சுவிசேஷங் கற்காக் காலம்
இழிவான சுவடிகதை படிக்குங் காலம்
இயேசுபரன் திருச்சபையுட் சேராக் காலம்
இறந்தஹிந்து மதம்எழும்ப நினைக்கும் காலம்
இயேசுபரன் சிலுவையுண்மை யறியாக் காலம்
இக்காலக் கொடுமைதனை என்சொல் வேனோ?

24 இல்வாழ்க்கை நெறிபிறழ்ந்து நடக்குங் காலம்
இச்சைமிஞ்சி வேசிகளுக் குழைக்குங் காலம்
நல்வாழ்க்கைத் துணைக்குடையூண் அளிக்காக் காலம்
நாய்மாதர்க் குள்ளதெலாம் இறைக்குங் காலம்
புல்வாழ்க்கை போதுமென மகிழுங் காலம்
புத்திசொல்லும் உத்தமரைப் பழிக்குங் காலம்
செல்வாழ்க்கை நிலையுணரா மயக்க காலம்
தீயகா லமிதனை என்சொல் வேனோ?

25 சீரழியச் சிலவுசெயும் பெருமைக் காலம்
சிரார்த்தம்வீ ணாய்க்கொடுக்கும் குருட்டுக் காலம்
பாரழியச் சிசுமணஞ்செய் பழிப்புக் காலம்
பரிதாபம் விதவைகளைப் படுத்துங் காலம்
நேரழிய ஆபரணப் பேய்கொள் காலம்
நெஞ்சாரக் கடன்பட்டு விழிக்குங் காலம்
ஏரழியக் கிறிஸ்திறையை இகழுங் காலம்
ஈனகா லமிதனை என்சொல் வேனோ?

26 போதகர்கள் புரிந்தநலம் நினையாக் காலம்
பொய்யாக அவதூறு பேசுங் காலம்
காதகர்கள் துணிந்துகொள்ளை யடிக்குங் காலம்
கடவுளையார் கண்டதெனும் கபடர் காலம்
பாதகர்கள் வேஷமிட்டுப் பறிக்குங் காலம்
பணமொன்றை யேகருதிப் படிக்குங் காலம்
சூதகர்கள் முகஸ்துதியால் கெடுக்குங் காலம்
தூய்மையற்ற காலமிதை என்சொல் வேனோ?

27 சன்மார்க்கம் போதிக்க அறியாக் காலம்
சள்ளிட்டு மறியலிற் போய் தவிக்குங் காலம்
நன்மார்க்கம் விளக்கினக்கால் வையுங் காலம்
நற்குருக்க ளுக்கிடைஞ்சல் செய்யுங் காலம்
புன்மார்க்கம் தனைப்புகழும் புலைஞர் காலம்
பொதுநலமே நாடாத்தற் பொழிவுக் காலம்
துன்மார்க்கம் கோவில்களில் நடத்துங் காலம்
துடுக்குறைந்த காலமிதை என்சொல் வேனோ?

28 தாழ்ந்தோரை உயர்த்தும்வகை தேராக் காலம்
தலைகொடுத்து நிற்போரை நகைக்குங் காலம்
வாழ்ந்தோரைக் கெடுக்கவழி பார்க்குங் காலம்
மங்கையர்க்கும் அறிவுபத்தி வருத்தாக் காலம்
ஆழ்ந்தோரைக் கரையேற்றத் துணியாக் காலம்
அஞ்ஞான அரவெழும்பி ஆடுங் காலம்
சூழ்ந்தோரைச் சதிபுரியும் துஷ்டர் காலம்
துயரமுறுங் காலமிதை என்சொல் வேனோ?

29 இறையோர்கள் கற்பனைகட் கடங்காக் காலம்
இருகுடிகள் தமக்குள்ளே பகைசெய் காலம்
மறையோர்கள் கூத்தாடிக் கெடுக்குங் காலம்
மங்கையரும் நாடகம்பார்த் தழியுங் காலம்
பறையோர்கள் சுகநலத்தை நாடாக் காலம்
பலஜாதி பேதங்கொண் டிகழுங் காலம்
தறையோர்கள் ஒற்றுமையை இழந்த காலம்
தாங்கரிய காலமிதை என்சொல் வேனோ?

30 ஊனமாய் விக்கிரகம் வணங்குங் காலம்
உணர்விழிந்து பலதேவர் பணியுங் காலம்
ஞானமாய்ச் சொலும்வேதம் வெறுக்குங் காலம்
நாணமற்றுத் தீயதுறை நிலைக்குங் காலம்
பானமாய்ப் பவஅழலைக் குடிக்குங் காலம்
பரிசுத்த நடக்கையில்லாக் கடையர் கர்லம்
ஏனமாய் உழன்றவனைப் புகழுங் காலம்
இழிகாலக் கொடுமைதனை என்சொல் வேனோ?

31 வஞ்சகங்கள் உறவாடி முடிக்குங் காலம்
மனத்துளொன்றும் வாயிலொன்று மான காலம்
நெஞ்சகங்கள் சதிநினைவால் நிறையுங் காலம்
நீலிகளும் நீலர்களும் பெருத்த காலம்
நஞ்சகங்கள் கிளம்புபுத்தி நடத்துங் காலம்
நன்மையொடு தீமைசமர் விளைக்குங் காலம்
அஞ்சகங்கள் திடத்தியர வணைக்காக் காலம்
ஆகாத காலமிதை என்சொல் வேனோ?

32 மாசற்ற அவதாரம் இகழுங் காலம்
வன்பொய்யவ தாரங்கள் புகழுங் காலம்
காசற்ற சற்குருவைப் பற்றாக் காலம்
கள்ளருக்குத் தொண்டாகிச் சுமக்குங் காலம்
தூசற்ற திருத்தீர்த்த மாடாக் காலம்
துகட்டுறைபோய்க் குருட்டாட்ட மாடுங் காலம்
ஏசற்ற சத்தியத்தைப் பழிக்குங் காலம்
இக்கொடிய காலமிதை என்சொல் வேனோ?

33 கண்டபடி கோட்பாட்டைக் கதைக்குங் காலம்
கற்றறிவால் பெற்றவர்போல் நடிக்குங் காலம்
விண்டபடி ஒழுகாத விகடக் காலம்
வீணாடி வீணர்தலைக் கொண்ட காலம்
கொண்டபடி கடன்செலுத்தாக் குமண்டைக் காலம்
குருமொழிகேட் டடங்காத குறும்பர் காலம்
உண்டபடி நன்றியெண்ணா துருட்டுக் காலம்
ஓகோ! இக் காலமதை என்சொல் வேனோ?

34 சத்திய வேதமோ தாத காலம்
சத்திழந்த சதுர்வேதம் படிக்குங் காலம்
எத்திய பேய்மயக்கந் தெளியாக் காலம்
எம்பெருமாள் இயேசுபரம் பணியாக் காலம்
துத்திய முருக்களுக்கிட் டிழுக்குங் காலம்
துடுக்காய்த் துவிஞானம் வீசுங் காலம்
கத்திய முழக்கொடுகல் லெறியுங் காலம்
கசப்பான காலமிதை என்சொல் வேனோ?

35 காலத்தைக் கலியெனவே ஏசுங் காலம்
கருதுநீர் திருத்தமதைச் சிரிக்குங் காலம்
ஞாலத்தைப் பழவிருட்டில் நகட்டுங் காலம்
நட்பியம்பிப் புலிப்பாய்ச்சல் பாயுங் காலம்
சீலத்தை வளர்த்துவரைக் குலைக்குங் காலம்
தீயவிந்து மதவிடக்கை விரும்புங் காலம்
கோலத்தைப் போட்டிகத்தை மயக்குங் காலம்
கோட்டிசெயுங் காலமிதை என்சொல் வேனோ?

36 காலையிலே எழுந்துஜெப முடியாக் காலம்
கருடனைக்கண் டிருசென்னி புடைக்குங் காலம்
மாலையிலே தேவதுதி முழக்காக் காலம்
மதுவுண்டு வெறிகொண்டு புரளுங் காலம்
சீலையிலே முடிந்துதெய்வந் தொழுகுங் காலம்
செத்தவர்க்காய் இருப்போரை ஊட்டுங் காலம்
சாலையிலே பதுங்கிவழி பறிக்குங் காலம்
சண்டாளக் காலமிதை என்சொல் வேனோ?

37 பெருமைக்காய் ராமநாடு மென்னுங் காலம்
பேய்களையே மிகவணங்கி அழியுங் காலம்
ஒருமைக்காய் தேயத்தி லுழைக்காக் காலம்
உழைக்குமதங் குருஜனத்தைப் பழிக்குங் காலம்
குருமைக்காய் வழக்காடி நிற்குங் காலம்
கோவில்முதல் திருடிவிளை யாடுங் காலம்
இருமைக்காய் எடுத்தவுடல் கெடுக்குங் காலம்
ஈடணைக் காலமிதனை என்சொல் வேனோ?

38 செய்கின்றோம் மருந்தென்று திரியுங் காலம்
திரள்பணத்தை நோயரிடம் பிடுங்குங் காலம்
உய்கின்றோம் பிறர்நலத்துக் கென்னுங் காலம்
உலகமதைச் சருவகொள்ளை யாடுங் காலம்
பெய்கின்றோம் போதமழை என்னுங் காலம்
பேய்களைத்தெய் வீகரிக்கும் புரட்டுக் காலம்
கொய்கின்றோம் மதுவைஎன்று குடிக்குங் காலம்
கோமாளிக் காலமிதை என்சொல் வேனோ?

39 ஞாலமிகுங் கேடகற்ற நாடாக் காலம்
நன்குழைக்குங் கிறிஸ்துமதம் பழிக்குங் காலம்
ஓலமிகும் மாதரிழி வகற்றாக் காலம்
உழைப்பெடுக்குங் கிறிஸ்தவரைக் கடுக்குங் காலம்
சாலமிகும் ஹிந்துமதம் மெச்சுங் காலம்
சன்மார்க்க அறிவூட்டா துறங்குங் காலம்
சீலமிகும் இயேசுதுதி கூறாக் காலம்
திருக்குடைய காலமிதை என்சொல் வேனோ?

40 நிலத்தோடே நிலம்வீட்டைக் கூட்டுங் காலம்
நிஷ்டூர மாய்வழக்குப் போடுங் காலம்
நலத்தோடே எதிர்த்ததனை நசிக்குங் காலம்
ஞாயத்தைப் புரட்டிலஞ்சம் வாங்குங் காலம்
குலத்தோடே குலமோதி அழியுங் காலம்
கொடியவட்டி யிறுத்துகுடி குறுகுங் காலம்
கலத்தோடே ஊணினைக் கொண்டோடுங் காலம்
கடியகா லமிதனை என்சொல் வேனோ?

41 அறிவூட்டும் பெரியோரை நகைக்குங் காலம்
அஞ்ஞானம் ஒழிப்போரை விரட்டுங் காலம்
முறிவூட்டும் சண்டிகளைக் கூடுங் காலம்
மூதறிஞர் சொல்மதிகே ளாத காலம்
செறிவூட்டும் மிஷன்களை எதிர்க்குங் காலம்
செகப்புரட்டுக் கிருட்டிணனை ஏத்துங்காலம்
மறிவூட்டும் பொய்களைப்பா ராட்டுங் காலம்
மாகொடிய காலமிதை என்சொல் வேனோ?

## விளக்கம்

### காப்பு

சீலமுடைய கடவுளே! காலக் கொடுமைகளை நான் கண்டுணர்ந்து நல்லவற்றை நாடி உன் திருவடிகளில் இணைய அருள்புரிவாய்!

1 சத்தியமாகிய திருமறையின் நெறிமுறைகளை விட்டுவிட்டு அம்மறையினர் நடக்கலாயினர். ஐயத்திற்கிடமானவற்றின்மேல் ஆசை கொண்டு அவற்றைப் பற்றிக் கொண்டு ஏறலாயினர். என்றுமுள்ள வழிபாட்டு முறைகளைத் தவற விட்டுவிட்டனர். தீயோரின் குழுக்களில் சேரலாயினர். ஏமாற்றும் பேய்களின் வழிகள் மேல் விருப்பம் கொள்ளலாயினர். இயேசு கிறித்துவாகிய இறைவனின் திருப்பெயரை விட்டு நீங்கலாயினர். சத்தியத் திருமறையை இழிவுபடுத்திப் பேசுவதே சிலருடைய போதனையாக ஆகிவிட்டது. உண்மையான அறிவில்லாமல் போய்விட்டது காலக் கொடுமை யல்லவா?

2 இழிவான தந்நலச் சிந்தனைகளே புனிதமான வையாகக் கருதலாயினர். பணவாசை குறையாமல் அதன்மேல் பற்றுவைத்துக் குரங்கைப் போல் அங்கும் இங்கும் அலையலாயினர். கீழான வீம்புச் செயல்களில் பெருமளவில் ஈடுபடலாயினர். உண்மையான இறையடியார்மேல் வைக்க வேண்டிய

கீழ்ப்படிதல் பற்றிக் கவலை கொள்வதில்லை. இழிவான பேச்சுக்களில் ஈடுபடுவதே கொண்டாட்டமாகக் கொள்ளலாயினர். ஒருவர் செய்த நன்றியை எண்ணிப்பார்ப்பது முயல்கொம்பைப் போல் அரிதாக ஆனது. பொறாமையால் ஏற்பட்ட பகை முற்றிப் போராடுவது பெருகியது. இவற்றுக் கெல்லாம் காரணம் கற்றதனால் பெறும் அறிவு இல்லாத கொடுமையால் அல்லவா?

3 தூய்மை யில்லாத நடவடிக்கைகளில் ஈடுபடலாயினர். இயற்கையான அன்பாம் உள்ளத்தில் தீமையானவற்றின் வேர் இறங்கலாயிற்று. தூய மறையில் தூய்மையற் றவற்றை உரைக்கலாயினர் செழிப்பதற்கு இடையூறாக வீணான வேர்கள் தோன்றலாயின. இழிவான புராணக் கதைகளை உண்மை போல ஏற்கலாயினர். நல்லவர்களைப் பகைத்துக் கொள்வதை நோன்பு போல மேற்கொள்ளலாயினர். அதனைத் தூய்மையான ஆசாரங்களைப் போல் கைக்கொள்ளலாயினர். இவற்றுக்கெல்லாம் காரணம் கற்று அறிகின்ற உண்மையான அறிவு பெறாத காலக் கொடுமை யல்லவா?

4 இறைவழிபாடு நிகழ்த்துகையில் மது அருந்துவதும் ஒன்றாக அமைந்துவிட்டது. தீய சிந்தனைகளைத் தட்டியெழுப்பும் ஆடல்களைப் பார்ப்பதைச் சிலர் ஒரு தொழிலாகவே கருதிவிட்டனர். கையின் தொழில் பிறரை அடிப்பதுதான் எனக் கைக்கொள்ளலாயினர். அகதிகளிடத்தில்

மகிழ்ச்சியாக இருக்கவேண்டிய நிலையே இல்லையென்றாகி விட்டது. பிறரை ஒழிப்பதுவே உயர்ந்த குடியின் அடையாளம் எனக் கருதலாயினர். நோன்பு என்ற பெயரில் அளவுக்கதிகமான பண்டங்களைத் தின்பவர்களாயினர். நட்பு என்பது பிறரை நோகடிப்பதுதான் என்று எண்ணலாயினர். இதற்கெல்லாம் காரணம் கற்றுத் தெளிகின்ற அறிவில்லாத காலக் கொடுமையல்லவா?

5 சிறப்பாகப் போற்றப்பெறும் கற்புநெறி சீரழிந்து போய்விட்டது. தீமையைத் தருகின்ற மன வாசையின் வழியைத் தேடி ஓடலாயினர். நேர்மையான நன்னெறி தவறிப் போய்விட்டது. இழிவான துணிவும், இறுமாப்பும் பெருகிப் போயின. நல்லவற்றை நாடும் உள்ளம் எங்கோ போய்விட்டது அலைந்தும், மனம் விரும்பியும் பிறர் செல்வத்தின் மேல் ஆசை வைக்கலாயினர். கெட்டபெயரைக் கொண்டுவரும் களவு, கொலை போன்றவை மிகுதியாயின. எல்லாவற்றுக்கும் உண்மை அறிவைத் தரும் கல்வியைப் பெறாத காலக் கொடுமை யல்லவா?

6 உள்ளத்தில் கிளர்ந்தெழும் தெய்வ பக்தி குறைந்து போய்விட்டது. நாடகத்தில் வேடம் புனையும் பெண்ணைப் போல நாளுக்கொரு வேடம் போடலாயினர். பலரிடமும் நல்லுணர்வைக் கிளர்ந்தெழச் செய்யும் அன்பாகிய நிலையை வெறுக்கலாயினர். தேவையற்ற நஞ்சைப் போன்ற நாத்திகக் கொள்கைகளையே பாடநூல்களாகக் கொள்ளத் தொடங்கினர். திருமறைக் குலப்

பெருமையைக் கூறும் விவிலியத்தை ஒதுக்க லாயினர். கூத்தாடும் இடங்களைத் தேடும் நாட்டம் தோன்றலாயிற்று. கலகங்களை உருவாக்கும் பேய்க்கதைகள் நல்ல போதனைக் குரியனவாயின. இவையெல்லாம் கற்றறியும் உண்மையறிவு பெறாதது காலக் கொடுமை யல்லவா?

7 கோமாளித்தன்மையைக் குலத்திற்குரிய சிறப்பு எனக் கருதலாயினர். கூடா நட்பின்மேல் அதிக விருப்பம் கொள்ளலாயினர். பூம்பூம் மாட்டைப் போல் அங்கும் இங்கும் அலைந்து உணவைப் பெறுவதாயினர். பொருள் ஒன்றே தேவையென்று எண்ணி வெட்கத்தை இழக்கலாயினர். 'ஏமாளி' என்று உரிய மதிப்பளிப்பதில் குறையேற்படுத்தலாயினர். ஒழுக்கம் என்பது பாழாய்ப் போன வீட்டிற்குரியோரின் தன்மை என்று ஆயிற்று. கேடான குணங்கள் கணக்கற்றுப் பெருகிவிட்டன. இவற்றுக் கெல்லாம் காரணம் கல்வியறிவில்லாக் காலத்தின் கொடுமை யல்லவா?

8 வீண் தோற்றத்தை வைத்து அடிகள் என்று அழைக்கத் தொடங்கலாயினர். நற்குணங்களைக் கொள்ளுமாறு வழி நடத்தக் கூடிய குருக்களைத் திட்டும் நிலை ஆயிற்று. ஒழுக்கத்தை வலியுறுத்துகின்ற கவிதைகளை மறந்து விடலாயினர். பாமரர்களிடையே செல்வாக்குள்ள சிந்து போன்ற கவிகள் சிறப்படையலாயின. தூலமாகிய உடம்பைப் பெருக்க வைப்பதே தொழில் என்றாகி விட்டது. மக்கள் சோதிடம், குறிகளை விரும்பலாயினர், கால நேரத்தைக் குறைகூறி வீண்

பொழுது போக்கலாயினர். எல்லாவற்றுக்கும் காரணம், கல்வி யறிவில்லாக் காலத்தின் கொடுமை யல்லவா?

9 பழங்காலத்தில் பின்பற்றி வந்த நல்லவற்றை யெல்லாம் விட்டுவிடலாயினர். பாவத்தை உண்டாக்கக் கூடிய பலவற்றை ஏற்றுக் கொள்ளலாயினர். விதவைகள் கட்டாயம் முண்டு கட்டவேண்டும் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. வயது முதிர்ந்தவன், சிறுமியை மனைவியாக்கிக் கொள்ளும் நிலைமையாகி விட்டது. தொண்டுள்ளம் சிறிதும் இல்லாதவர்களுக்கு வணக்கம் செலுத்தும் நிலை ஏற்பட்டுவிட்டது. சிலைகளைச் சுவாமிகள் என வணங்கலாயினர். உண்மைகளைக் கண்டறிந்து கூறுவோர் பகைவராயினர். இவற்றுக் கெல்லாம் காரணம் கல்வியறிவில்லாக் காலக் கொடுமை யல்லவா?

10 படித்தவர்கள் என்ற மமதை கொள்ளலாயினர். பேசுகின்ற தாய்மொழியில் படிப்பில்லை என்றாகிவிட்டது. சத்தியை வழிபடுவதே வானுலகம் ஏகும்வழி என எண்ணும் நிலையானது. சித்தியைத் தராத அத்துவைதத்தைப் பின்பற்றத் தொடங்கினர். மேற்கில் வாழ்வோரை வெற்றிகொண்டு விட்டோம் எனக் கருதலாயினர். கத்தி ஆரவாரம் செய்தல்தான் திருமறை போதிக்கும் வழி எனக் கருதலாயினர். இவற்றுக்கெல்லாம் காரணம் கல்வியறிவு பெறாத காலக் கொடுமை யல்லவா?

11 ஞானிகளைப் போலப் பலரும் பேசலாயினர். ஆனால் அவர்களுடைய நடவடிக்கைகள் முழுதும் விபரீதமானவை யாயின. இழிகுணமுடையோரைக் குருவெனப் போற்றிக் கொண்டாடலாயினர். தகுதி வாய்ந்த திருமறைப் போதகரின் உரைகளை வெறுத்துத் தள்ளினர். குறையுடையவரைத் தேவர்கள் என்று பணிந்து வணங்கலாயினர். மூவோர் இறைவனை வெறுக்கலாயினர். கானல் நீர்போல் உண்மை யில்லாதவற்றைக் கண்டு மயங்குவோருக்கே நல்ல காலமாக மாறிப் போனது. எல்லாவற்றுக்கும் காரணம் கல்வியறிவில்லாது போன காலக் கொடுமை யல்லவா?

12 குருக்களை ஏமாற்றக் கற்றுக் கொள்ளலாயினர். கற்றுக்கொண்டபின் குருக்களை ஏளனமாகப் பேசலாயினர். குருக்களை ஏமாற்றி அவர்களைப் பின் தொடர்வார் ஆயினர். பின்னர் அவர்களுடைய சொற்கள் அவர்களுக்குப் பிடிக்காமல் போயின. குருக்களை ஏமாற்றிப் பணம் பறிக்கலாயினர். பின்னர் அவர்களுக்குக் கொழுப்பேறி அவர்களையே எதிர்த்துக் குரைக்கலாயினர். குருக்களைக் காண்பதற்குக்கூடக் கூச்சப் படலாயினர். இவற்றுக்கெல்லாம் காரணம் கல்வியறிவு இல்லாத காலத்தின் கொடுமை யல்லவா?

13 உலகத்தில் ஒரு சாண்வயிறே தெய்வம் என்று கருதலாயினர். புண்ணியத்தைத் தேடுகின்ற செயலே மருந்தைப்போல அரிதாகிப் போனது. பெயர்களை மாற்றிக்கொண்டு ஆளுக்கேற்றாற்

போல் திரியலாயினர். நல்லொழுக்கங்கள் எல்லாம் சண்டித்தனப் பேர்வழிகளால் நகைப்பிற்கிடமானது. உலகில் தீயவர்களுக்கே நினைத்தது நடப்பது ஆனது. நீதிமான்களுக்கு மிகவும் சோர்வே கிடைப்பது ஆனது. காமச் செயல்களிலே இளைஞர்களுக்கு விருப்பம் ஏற்படுவதாயிற்று. இவற்றுக் கெல்லாம் காரணம் கல்வியறிவில்லாக் காலத்தின் கொடுமை யல்லவா?

14 உந்தியிலிருந்து பிறந்தவனைத் தெய்வமாகக் கொள்கின்ற தன்மை பெருகிப் போய்விட்டது. உன்னதராகிய கிறித்துவை வழிபடுவது குறைந்து போய்விட்டது. விருந்தில் மதுவைப் பறிமாறுவது எங்கும் பரவிப் போய்விட்டது. கேலியான பாட்டாகத் தெய்வத்தைப் புகழ்கின்ற பாடல்கள் ஆகிவிட்டன. குற்றம் காணப்படாத வாழ்வு நிலையைக் காண்பது கானல் நீரைப்போல் ஆகிவிட்டது. தூய்மையான வாழ்க்கை நடத்துவது இழிவுக் குரியதாக ஆகிவிட்டது. தேவையற்ற இழிவான பேச்சுக்களே எங்கும் பரவிப் போய்விட்டது. இவை எல்லாவற்றுக்கும் காரணம் கல்வியறிவில்லாத காலத்தின் கொடுமை யல்லவா?

15 உலகத்தின் ஆதாரமாகிய கடவுளையே பகுத்தறிவு நோக்கத்தில் பார்க்கலாயினர். தீமை செய்வதை உதவி செய்வதுபோல் கூறலாயினர். தீய நோக்கத்தில் நடந்துகொள்வதே சிந்தனையாகக் கொள்ளலாயினர். திருடர்களுக்காகப் பரிந்துரை பெறுவது எளிதாகப் போயிற்று. கற்பை விற்றுப் பிழைப்பு நடத்துவது மகிழ்ச்சிக்குரிய செயல்போல்

ஆயிற்று. நாய்கள் எலும்பை நக்கி மகிழ்வது போல, இழிவான செயல்களைச் செய்து களிக்கலாயினர். செவிகுளிரக் கேட்ட அறிவெல்லாம் வீணாகிப் போகும் நீராயிற்று. இவற்றுக்குக் காரணம் கற்றறிவில்லாக் காலக் கொடுமை யல்லவா?

16 திருமறைப் போதகர்கள் செய்து வந்த உதவிகளுக்கு நன்றி காட்டாமல் மறந்துவிடும் நிலை ஆகிவிட்டது. அவர்களைப் பாதகர்கள் என்று கூறிப் பழிக்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. போதர்களைப் பின்பற்றி எதிர்த்தரப்பினரும் கடைவிரித்தாற் போலச் செயல்படத் தொடங்கிவிட்டனர். அதில் தலையிட வகையின்றி வெட்கப்பட்டுப் புலம்ப வேண்டியதாயிற்று. சோதிடர்கள் மக்களை ஏமாற்றித் திரியலாயினர். சூனியம், மந்திரம் என்று வாதிக்கத் தொடங்கிவிட்டனர். போக்கிரிகளைப் போல தீச்செயல்களைப் புரியலாயினர். இவை எல்லாவற்றுக்கும் காரணம் கற்றறிவில்லாத மக்கள் வாழும் காலக் கொடுமை யல்லவா?

17 மாட்டுக் கறி தின்போரைப் பறையனெனப் பழித்துப் பேசிவிட்டு, மறைவாக முழுமாடே தின்னும் நிலையாகிவிட்டது. காய்கறி மட்டும் உண்டவன் கடல்கடந்து சென்று ஊன் உணவைத் தின்னும் நிலை ஏற்பட்டுவிட்டது. மாமிச ஆசை தீர மதுவினாலும் சூடேற்றிக் கொள்ளும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆட்டுக்கறி சாப்பிடுவோன் இழிவானவன் என்று மக்களை ஏமாற்றிக் கூறியோர், ஆசைப்பட்டு ஆட்டை அறுத்து உண்ணும் நிலை ஏற்பட்டுவிட்டது. காட்டையே

அழித்துத் தின்னும் யானை போல் மதங்கொண்டு அலையாலாயினர். எல்லாவற்றுக்கும் காரணம் கல்வியறிவில்லாத காலக் கொடுமை யல்லவா?

18 முன்னால் ஒன்றை ஏற்றுக்கொண்டு, பின்னால் அதை மீறி நடக்கும் தன்மை கொண்டவராயினர். பதவியைப் பெற ஏமாற்று வேலைகளைச் செய்யலாயினர். முதிய கிழவிகள் கூறும் பழைய முறைகள்பற்றியதைக் கேட்டுக்கொண்டு சிந்தனையைத் தூண்டும் மேலை நாட்டார் கூறும் முறைகளை முடக்கிப் போட்டு விட்டனர். முட்டாள் தனங்களைக் கைக்கொண்டு அறிவுபூர்வமாக வாழ்வது கடினமாகப் போய்விட்டது. மாண்பற்ற மூடக்கொள்கைகளைப் பின்பற்றுவதை வழக்க மாக்கிக் கொண்டுவிட்டனர். கடன்வாங்கி மகிழ்ச்சியாகச் செலவிட்டு வாழ்வதே பழகிப் போய்விட்டது. இவற்றுக்கெல்லாம் காரணம் மக்கள் கல்வியறிவு பெறாத காலக் கொடுமை யல்லவா?

19 வானுலகத்தில் உள்ளத்தைச் செலுத்துதல் வீணானது என்று எண்ணலாயினர். வீம்பாகப் பேசும் நாத்திகமே கொள்கை என்று எண்ணலாயினர். மண்ணுலக வாழ்வின் சுகமே பெரிது என்று அதில் உழலலாயினர். வாதத்தில் ஈடுபடுவோர் பிறரை வைவதுதான் திறமை யென்றாகி விட்டது. எனக்கு நிகரானவர் எவருமிலர் என்று இறுமாப்புக் கொள்ளலாயினர். எழுத்திலோ, பெயரிலோ சிலவற்றைச் சேர்த்துக் கொண்டு, பெருமைப்பட்டுக் கூத்தாட லாயினர். கண்ணால் காண்பதனை யெல்லாம் தெய்வம் என்று கொண்டாட லாயினர்.

எல்லாம் கல்வியறிவில்லாக் காலத்தின் கொடுமை யல்லவா?

20 நிலையில்லா உடம்பின்மீது பற்றுக்கொண்டு, நிலையான தூய ஆவியின்மீதுள்ள பற்றுக் குறைந்து போயினர். பொல்லாத மனுக்களுடைய சதிகளைப் புரிந்து கொள்ளாமல் பெரிதாக எண்ணத் தொடங்கினர். போக்கிரிகள் சண்டியர்களுடன் தொடர்பு கொள்ளலாயினர். திருமறையில் சொல்லப்படாதவற்றோ டெல்லாம் தொடர்பு வைக்கத் தொடங்கினர். சோம்பலாக இருந்து கொண்டு உண்டு வாழ்வதே தொழிலாகிப் போய்விட்டது. குருக்கள் கல்லாத மூடர்களின் குலத்திலிருந்து தோன்றலாயினர். எல்லா வற்றுக்கும் காரணம் கற்றறிவில்லாக் காலக் கொடுமை யல்லவா?

21 பாத்திரங்களைக் கையிலெடுத்துக் கொண்டு செல்லாமல் பிச்சையெடுப்பது போல் ஆகிவிட்டது. பார்ப்பனர்கள் அவ்வாறு எடுப்பதற்கு மனு சாத்திரங்கள் ஒரு காரணமாக அமைந்து விட்டன. பொய்யான கதைகள் பலவற்றை வீணாய் சாத்திரங்கள் கூறலாயின. நான்மறை சபையினர் கூடி மற்றவரை மிரட்டலாயினர். கற்சிலைகள் முன் நின்று போற்றலாயினர். தீய பேய்களின் தீரத்தனங்களைக் காண்பது கண்களுக்கு இன்பமாகி விட்டது. பாதுகாப்பான திருமறை கசப்பாகி விட்டது. இவற்றுக்கெல்லாம் காரணம் கற்றறிவில்லாமற் போன காலக் கொடுமை யல்லவா?

22 கிறித்தவம் சமுதாயத்திற்குச் செய்துள்ள நன்றியை மறந்துவிட்டு அதனை ஏசும் காலமாயிற்று. கருவம் கொண்டு பத்திரிகைகள் அதனை வெளியிடும் காலம் ஆயிற்று. கிறித்தவம் சமுதாயத்திற்குச் செய்துவரும் நல்ல முயற்சிகளைத் தடுக்கும் காலம் ஆனது. கேவலமாகத் தெருவில் நின்று கொண்டு பழிக்கின்ற காலம் ஆகிப் போனது. கிறித்தவ உண்மையாம் கொழுப்பை உண்ணாமல் வளருகின்ற காலம் ஆனது. நமக்குக் கிடைத்திருக்கின்ற நல்ல அரசாட்சியை உணராத காலம் ஆனது. கிறித்தவத்தின் சமாதான எண்ணத்தை மக்கள் உணராத காலமாகிப் போனது. கெட்ட காலமாக மாறிப்போன இதனைப்பற்றி என்ன சொல்ல முடியும்?

23 இயேசு பெருமானின் மானிடபீட்பை ஏற்காத காலமாகி விட்டது. எம்பெருமானுடைய திருப் பெயரை இகழ்ந்து பேசுங் காலமாகி விட்டது. இயேசுபிரானைப் பின்பற்று பவர்களும் விவிலியத்தைப் படிக்காத காலமாகிவிட்டது. இழிவான சுவடிகளில் உள்ள பழங்கதைகளைப் படிக்கின்ற காலமாகி விட்டது. இயேசுபிரான் அருளிய திருச்சபையில் சேராத காலமாகி விட்டது. அழிந்துபோய்க் கொண்டிருக்கிற இந்து மதம் மீண்டும் வளர எண்ணுகின்ற காலமாகிவிட்டது. இயேசுபிரானின் சிலுவைத் துன்பத்தின் உண்மைகளை யறியாத காலமாகிப் போனது. இக்காலக் கொடுமை பற்றி என்ன நான் சொல்வது?

24 இல்வாழ்க்கையை மேற்கொண்டோர் கூட நெறிமாறி நடக்கின்ற காலமாகிவிட்டது. உடலின்ப ஆசை அதிகமாகி விலைமாதர்களுக்காக உழைக்கின்ற காலமாகிவிட்டது. உண்மையான வாழ்க்கைத் துணைவிக்கு உணவு, உடை முதலியவற்றை வழங்காத காலமாகிவிட்டது. நாய் போன்று பலரிடத்தும் அலைகின்ற பெண்களிடத்தில் இருப்பதையெல்லாம் இறைக்கின்ற காலமாகி விட்டது. அற்பமான இவ்வுலக வாழ்க்கை இன்பம் போதும் என்று மனநிறைவு கொள்ளும் காலமாகிவிட்டது. நல்ல புத்தி சொல்லுகின்ற உத்தமர்களைப் பழிக்கின்ற காலமாகிவிட்டது. இல்வாழ்க்கையின் நிலையாமையை உணராமல் மயங்கித் திரியும் காலமாகிவிட்டது. ஆதலால், தீயதாக இருக்கின்ற தற்காலத்தைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

25 சிறப்பெல்லாம் கெடுமாறு செலவு செய்வதைப் பெருமையாகக் கருதுகின்ற காலமாகிவிட்டது. இறந்தவர்க்காக வீணாகச் சிரார்த்தம் போன்றவற்றைக் குருட்டுத்தனமாய்க் கொடுக்கின்ற காலமாகிவிட்டது. உலகத்திற்குத் தீங்கான குழந்தைத் திருமணம் செய்து பழிச்சொல்லை ஏற்கின்ற காலமாகிவிட்டது. விதவைகளைப் பரிதாபமாகக் கொடுமைப் படுத்தும் காலமாகிவிட்டது. அணிகல ஆசைகொண்ட பேய்களாகிச் சிறப்பழிய நிற்கும் காலமாகிவிட்டது. அதன் காரணமாக மனமறியக் கடன்பட்டுச் செய்வதறியாமல் விழித்துக் கொண்டிருக்கும் காலமாகிவிட்டது. சிறப்பு அழியுமாறு இறைவனாம்

கிறித்துவை இகழும் காலமாகிவிட்டது. இழிவான காலமான இதனைப்பற்றி நான் என்ன சொல்லமுடியும்?

26 திருமறைப் போதகர்கள் செய்துவரும் நன்மைகளை நினைத்துப் பார்க்காத காலமாகிவிட்டது. பொய்யாக அவர்களைப்பற்றி அவதூறாகப் பேசுகின்ற காலமாகிவிட்டது. தீயவர்கள் துணிந்து கொள்ளை யடிக்கும் காலமாகிவிட்டது. கடவுளை யார் நேரில் பார்த்தது என்று நம்பிக்கை யற்றவர்கள், தெரிந்துகொண்டே தெரியாததுபோல், கேட்கின்ற காலமாகிவிட்டது. சமுதாயத்திற்குப் பாதக மானவர்கள் வேடம்போட்டு நன்மைகளைப் பெற முயலும் காலமாகிவிட்டது. படிக்கின்றவர்கள் பணமொன்றனையே குறிக்கோளாகிக் கொண்டு படிக்கின்ற காலமாகிவிட்டது. சூழ்ச்சியாளர்கள் முகத்திற்கு நேராக நின்று, உண்மைக்கு மாறாக அவர்களைப் புகழ்ந்து பேசி, அவர்களைக் கெடுக்கின்ற காலமாகிவிட்டது. இப்படிப்பட்ட தூய்மையற்ற காலத்தைப்பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

27 உண்மையான நெறிகளைப் போதிக்கத் தெரியாத காலமாகிவிட்டது. சல்லித்தனமாக அமைந்து, எதிர்ப்பு மிகுந்து மறியல் செய்யும் அளவிற்கு வந்து எதிர்கொள்ள இயலாமல் தவிக்கும் காலமாகிவிட்டது. நன்னெறிகளை விளக்க முற்படுவோரை வைகின்ற காலமாகிவிட்டது. நல்ல குருமார்களுக்குத் தேவையற்ற இடைஞ்சல்களைச் செய்யும் காலமாகிவிட்டது. தீமையான நெறிகளைப்

புகழுகின்ற காலமாகிவிட்டது. பொது நலத்தை நாடாமல் தன்னைப் பற்றியே புகழ்ந்து பேசிக் கொள்கின்ற காலமாகிவிட்டது. தீய வழிகளைக் கோவில்களில் புகுத்துகின்ற காலமாகிவிட்டது. தீயவை நிறைந்த இக்காலத்தைப்பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

28 தாழ்ந்தநிலையில் உள்ளவர்களை உயர்த்து வதற்கான வழிகளைத் தேடாத காலமாகிவிட்டது. தலை கொடுத்தும் பிறரை வாழ வைக்க நினைப்போரைப் பார்த்துச் சிரிக்கும் காலமாகி விட்டது. நல்வாழ்வு வாழ்வோரைக் கெடுக்க வழி பார்க்கும் காலமாகி விட்டது. பெண்களுக்கும் அறிவு, பக்தி ஆகியவற்றைப் பெற்றுக்கொள்ள உழைக்காத காலமாகிவிட்டது. துன்பத்தில் ஆழ்ந்திருப்போரைக் கரைசேர்க்க முற்படாத காலமாகிவிட்டது. அஞ்ஞானமாகிய விடம் கொண்ட பாம்பு எழுந்து நின்று ஆடும் காலமாகிவிட்டது. சூழ்ந்திருப்போரை அழிக்கச் சதிசெய்யும் தீயவர்கள் உள்ள காலமாகிவிட்டது. மக்கள் துன்பங்கள் பெருகிப் போன இந்தக் காலத்தைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

29 இறைவனைப் பற்றி எழுந்துள்ள கற்பனைக் கதைகள் எண்ணிக்கையில் அடங்காத காலமாகிப் போய்விட்டது. அறியாமை இருள் சூழ்ந்த குடிமக்கள் தங்கட்குள்ளே பகைவர்களாகக் கருதித் துன்பமுறும் காலமாகிவிட்டது. மங்கையரும் தீய நாடகக் காட்சிகளைக் கண்டு கெட்டுப் போகும் காலமாகிவிட்டது. பறையடித்து வாழ்வோருக்கு

நன்மைகளைச் செய்யாத மக்கள் வாழும் காலமாகிவிட்டது. மக்களுக்குள்ளே சாதிவேறுபாடு காட்டி ஒருவரையொருவர் இகழும் காலமாகிவிட்டது. தரையில் வாழ்கின்ற மக்கள் தங்களுக்குள்ளே ஒற்றுமையை இழந்த காலமாகிவிட்டது. தாங்க முடியாத பொறுமையிழந்த இந்தக் காலத்தைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

30 உள்ளம் ஊனமடைந்து விக்கிரகங்களை வணங்குகின்ற காலமாகிவிட்டது. உண்மை யுணர்வின்றிப் பல தேவர்களை வணங்கும் காலமாகிவிட்டது. ஞானத்தோடு கூறுகின்ற உண்மைத் திருமறையை வெறுக்கின்ற காலமாகிவிட்டது. நாணத்தை இழந்து தீய வழிகளில் ஈடுபட்டு, அவற்றில் நிலைத்திருக்கும் காலமாகிவிட்டது. நீர்போலப் பாவ நெருப்பை மக்கள் குடிக்கின்ற காலமாகிவிட்டது. தூய்மையான நடவடிக்கைகளை மேற்கொள்ளாத தீயவர்களின் காலமாகி விட்டது. பாவத்தில் வாழ்கின்றவனைப் புகழ்கின்ற காலமாகி விட்டது. இழிவான இத்தகைய காலத்தைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

31 வஞ்சகச் செயல்களோடு உறவாடி அதை வெற்றியாகக் கருதுகின்ற காலமாயிற்று. மனத்திலொன்றும் சொல்லில் ஒன்றுமாக நடக்கும் காலமாயிற்று. நெஞ்சங்கள் எல்லாம் சூழ்ச்சியான நினைவுகளால் நிறைவடையும் காலமாயிற்று. நீலித்தன்மை கொண்ட ஏமாற்றும் பெண்களும்

ஆண்களும் பெருகிப் போன காலமாயிற்று. நஞ்சு நிறைந்த புத்தியால் வாழ்க்கையை நடத்துங் காலமாயிற்று. நன்மை செய்வதுபோல் தீமையான போர் புரியும் காலமாயிற்று. அச்சங்கொண்ட உள்ளங்கள் தடுமாறிப்போக, அவற்றை அணைத்துக் கொள்ளாத காலமானது. ஒன்றுக்கும் பயனில்லாத இக்காலத்தைப் பற்றி நான் என்ன சொல்லக்கூடும்?

32 சிறு குற்றங்கூட இல்லாத திரு அவதாரம் கொண்ட இயேசுபிரானை இகழும் காலமாயிற்று. தீமை விளைவிக்கும் பொய்யான அவதாரங்களைப் புகழ்ந்து பேசுகின்ற காலமானது. காசில்லாது உன்னதமான குருவைப் போற்றாமல், கள்ளருக்குத் தொண்டு செய்வது போல், தீயவர்களைத் தோளில் சுமப்பதுபோல் போற்றும் காலம் ஆனது. தூய்மையான திருநீராட்டுச் செய்யாத காலமாயிற்று. தூய்மையற்ற துறையில் குருட்டாட்டமாக நீரில் ஆடும் காலமாயிற்று. குறையற்ற சத்தியத்தைப் பழித்துப் பேசும் காலமாயிற்று. இத்தகைய கொடிய காலத்தைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

33 கண்டபடியாகக் கொள்கைகளை இட்டுக் கட்டிப் புனையும் காலம் ஆனது. கற்ற அறிவாளிகளைப் போல நடித்து, ஏமாற்றும் காலம் ஆயிற்று. சொன்னவாறு நடந்து கொள்ளாத கோமாளிக் காலமானது. கூறினவாறு கடனைத் திருப்பிக் கொடுக்காத காலமாக ஆனது. குருவின் மொழியைக் கேட்டு அதன்படி நடக்காத குறும்பர்களின் காலமானது. உண்டவீட்டுக்கு நன்றி காட்டாமல், அவர்களுக்கே தீங்கு செய்யும்

காலமானது. அப்படிப்பட்ட இந்தக் காலத்தைப் பற்றி என்ன சொல்லமுடியும்?

34 சத்தியத் திருமறையைப் பின்பற்றாத காலமானது. சத்தியை இழந்த நால்வேதத்தைப் படிக்கும் காலமாகிப் போனது. ஏமாற்றும் பேய்களில் மயங்கி உண்மையைத் தெளிந்துணராத காலமானது. எம்பிரான் இயசேபிரானைப் பணியாத காலமானது. உருவச் சிலைகளுக்குப் போற்றுதல் கூறி அவற்றைத் தேர்களில் வைத்து இழுக்கும் காலம் ஆனது. துடுக்குத்தனமாக தூய கருத்துக்களை ஒதுக்கித் தள்ளும் காலமாக மாறிப் போனது. கத்திக் கொண்டு, முழக்கம் செய்து கல்லெறியும் காலமாக ஆனது. கசப்பான இந்தக் காலத்தைப்பற்றி நான் என்ன கூறமுடியும்?

35 இந்தக் காலத்தைக் கலிகாலம் எனக் கூறி ஏசுகின்ற காலமாகிப் போனது. ஏற்ற நல்ல சீர்திருத்தங்களைக் கண்டு எள்ளி நகையாடும் காலமானது. உலகத்தை அறியாமை இருளில் தள்ளிவிடும் காலமானது. நட்போடு இருப்பதாகக் கூறி வெளிப்படப் புலியைப் போன்று பாய்கின்ற காலம் ஆனது. ஒழுக்கத்தை வளர்ப்பவரை அழிக்க முயலும் காலம் ஆனது. தீமையான இந்துமதக் கொள்கைகளை விரும்பும் காலம் ஆனது. கோலம் போட்டு இந்த உலகத்தின்மேல் ஆசைப்பட்டு மயங்க வைக்கும் காலம் ஆனது. பைத்தியகாரத் தனமான இந்தக் காலத்தைப் பற்றி நான் என்ன கூற முடியும்?

36 காலையில் எழுந்ததும் இறை மன்றாட்டை

முடிக்காத காலம் ஆனது. கருடனைக் கண்டதும் தலையின் இருபுறமும் கையால் அடித்துக் கொள்ளும் காலம் ஆனது. மாலையில் இறைவனைப் போற்றித் துதிக்காத காலம் ஆனது. அதற்குப் பதில் மதுவைக் குடித்து வெறிகொண்டு தரையில் புரளும் காலம் ஆனது. சீலையிலே முடிச்சுப் போட்டுக் கொண்டு தெய்வத்தை வழிபடும் காலம் ஆனது. செத்தவருக்காக, இருப்போருக்கு உணவிடும் காலம் ஆனது. சாலையிலே பதுங்கியிருந்து வழிப்பறி செய்யும் காலம் ஆனது. சண்டாளத் தனமான இந்தக் காலத்தைப் பற்றி நான் என்ன கூற முடியும்?

37 பெருமைக்காய் இந்நாடு இராமர் நாடு என்று கூறும் காலமாக ஆனது. பேய்களையே தெய்வங்களாக வணங்கி அழியும் காலம் ஆனது. ஒருமைப்பாட்டிற்காக இந்நாட்டில் உழைக்காத காலம் ஆனது. அதற்காக உழைக்கின்ற மதத்தையும் மக்களையும் பழித்துப் பேசும் காலம் ஆனது. குருக்கள் பதவிக்காய் வழக்காடி நிற்கின்ற காலமானது. கோவில் முதற்கொண்டு எல்லா இடங்களிலும் திருட்டுச் செயல்புரியும் காலம் ஆனது. இம்மை, மறுக்காய் எடுத்த இந்த மனித உடலைக் கெடுக்கும் காலமாகப் போனது. இழிவான இந்தக் காலம்பற்றி என்ன கூறமுடியும்?

38 மருந்து செய்து தருகிறோம் என்னு ஊரெல்லாம் பொய்யர்கள் திரியும் காலமானது. பெரும்பணத்தை நோயளிகளிடமிருந்து பறிக்கும் காலமானது. பிறருக்காக உழைக்கின்றோம் என்று சொல்லி

உலகத்தைக் கொள்ளையடிக்கின்ற காலமாகிப் போனது. அறிவு மழை பொழிகின்றோம் என்று சொல்லிப் பேய்களைத் தெய்வங்களாகப் புரட்டிக் காட்டும் காலமானது. மதுவொழிப்புச் செய்கின்றோம் என்று சொல்லி மறைவாகக் குடிக்கின்ற காலமானது. கோமாளித் தனமான இந்தக் காலத்தைப் பற்றி என்ன கூறமுடியும்?

39 உலகத்தில் உள்ள தீமைகளை அகற்ற விரும்பாத காலமானது. மக்களுக்காக உழைக்கும் கிறித்து மதத்தைப் பழிக்கும் காலமானது. ஒலமிடும் பெண்களுக்கு ஏற்பட்டுள்ள இழிவுகளைப் போக்காத காலமானது. உழைத்துவரும் கிறித்தவரிடம் சினம் காட்டும் காலமானது. சால மிகுந்தது இந்துமதம் என அதனைப் போற்றும் காலமானது. உண்மையான நெறி எது என்னும் அறிவை ஊட்டாத காலம் ஆனது. உயர்வான இயேசுவைப் போற்றுகின்ற வழியை எடுத்துக் கூறாத காலம் ஆனது. ஏமாற்றுக் கொண்ட இந்தக் காலத்தைப் பற்றி நான் என்ன கூற முடியும்?

40 நிலத்தோடு நிலத்தையும் வீட்டையும் சேர்க்கின்ற காலமானது. கொடுமையாக வழக்குப் போடுகின்ற காலமானது. நன்மைகளை எதிர்த்து அவற்றை அழிக்கும் காலம் ஆனது. நீதியைப் புரட்டிப் போட லஞ்சம் வாங்கும் காலம் ஆனது. ஒரு குலத்தினரோடு மற்றொரு குலத்தினர் மோதி அழிகின்ற காலம் ஆனது. கொடுமையான வட்டி வாங்கிப் பிற குடிகளை யெல்லாம் அழிக்கும் காலமானது. கையில் உள்ள பாத்திரத்தோடு உணவினையும் பறித்துக் கொண்டு ஓடுகின்ற

காலமானது. கடுமையான இந்தக் காலத்தைப்பற்றி என்ன கூற முடியும்?

41 அறிவுரை தருகின்ற பெரியவர்களை எள்ளி நகையாடும் காலமானது. அஞ்ஞானத்தை ஒழிக்க முற்படுவோரை விரட்டுகின்ற காலமானது. உறவை முறிக்கும் சண்டித்தனமுடையோரோடு கூடிக் களிக்கும் காலமானது. மூதறிஞர்களின் நற்சொற்களைக் கேட்க முன்வராத காலமானது. நாட்டுக்கு வளத்தை ஏற்படுத்தக் கூடிய திருமறை பரப்பும் நிறுவனங்களை எதிர்க்கின்ற காலமானது. உலகத்தைத் திருவிளையாடலின் பெயரால் திருடியும், ஏமாற்றியும் திரிந்த கிருட்டிணனைப் போற்றும் காலம் ஆனது. வாழ்க்கைக்குத் தீமை செய்யும் பொய்களைப் பாராட்டிப் பேசும் காலமானது. மிகக் கொடுமையான இந்தக் காலத்தைப் பற்றி என்ன கூறமுடியும்?

## ஆய்வு

### தலைப்பும் யாப்பும்

ஒவ்வொரு தலைப்புக்கும் ஏற்றதான விவிலிய மொழியை நூலின் தொடக்கத்தில் தருவது தேசிகரின் வழக்கம் ஆகும். அவ்வாறு இந்நூலுக்கு, "கடைசி நாட்களில் கொடிய காலங்கள் வருமென்று அறிவாயாக" (11தீ-3:1) என்னும் பகுதியைத் தந்துள்ளார். அதற்கேற்ப, நாட்டின் அவர் கால அவல நிலைகளைப் படம் பிடித்துக் காட்டுகிறார். அந்நிலைகள் அனைத்தும், தற்காலத்திலும் தொடர்ந்து நிகழ்வது மக்களின் குறைபாடுகளைக் காட்டுவதாக உள்ளது. காப்புச் செய்யுள் குறள் வெண்பாவாகவும், பிற 41 செய்யுட்களும் எண்சீர் ஆசிரிய விருத்தங்களாகவும் உள்ளன. தொடக்கத்தில் உள்ள 21 விருத்தங்களும் 'காலக் கொடுமை தானே!' என முடிவுற, 22 முதல் 41 வரை உள்ள விருத்தங்கள் இவ்வகையாக உள்ள 'காலமிதை என்சொல் வோனோ?' என முடிவுறுகின்றன.

### திருமறைப் பற்று

தம்முடைய திருமறைப்பற்று மக்களிடம் குறைந்து வருவது கண்டு வேதனைப்படுவதைப் பல பாடல்களில் காண முடிகிறது. முதற் பாடலிலேயே, "சத்திய மறைமீறி நடக்க லாச்சு" என்றும், "இயேசுகிறிஸ் திறைநாமம் அருகி யாச்சு" என்றும் கூறுகிறார். 6-ஆம் பாடலில், "நலங்கிளரும் தேவபத்தி குறைச்ச லாச்சு" என்றும், "குலங்கிளரும் சுவிவேஷம் தள்ள லாச்சு" என்றும் பாடுகிறார். 23-ஆம் பாடலில், 'கிறித்தவ நன்றிமறந்

தேசுங் காலம்', 'கிறிஸ்தவ நன்முயற்சி தடுங்குங் காலம்'. 'கிறிஸ்தவ கொழுப்பையுன் னாதுழறுங் காலம்'. 'கிறிஸ்தவ சமாதானம் மதியாக் காலம்' என்றெல்லாம் கவலைப்படுகிறார். இவ்வாறே, 'இயேசுபிரான் அருள்மீட்பை ஏற்காக் காலம்' (22), 'ஏசற்ற சத்தியத்தைப் பழிக்குங் காலம்' (32) என்றெல்லாம் பல பாடல்களில் தம் உள்ளத்தில் எழும் வேதனையை வெளிப்படுத்துகிறார்.

## உள்ள வேட்கை

மனிதனின் மனம் நல்லதை நாடுவதைவிடத் தீயதைத் தேடுவதாக உள்ளதை எண்ணி வெதும்புகிறார். மேலானவற்றை நாடாமல், கீழானவற்றில் நாட்டங் கொள்வதைக் கண்டு நொந்து தம் உள்ளக்கருத்தைப் பல பாடல்களில் புலப்படுத்துகிறார். தாழ்வான தந்நலத்தை விரும்பும் நிலையாகிவிட்டது. பணவாசை மனிதனைப் பற்றிக் கொண்டது. கீழான அகந்தை மிகுந்து பெரியோர் முன் பணிவு காட்டுவதை விட்டுவிடும் எண்ணம் ஏற்பட்டது (2). தூய்மையான நடத்தைகளை விட்டுவிட்டனர். நல்லோரைப் பழிப்பதைத் தொழிலாகவே கொண்டு விட்டனர் (3). வானுலக நாட்டத்தை வீண் என்று எண்ணிவிட்டு, நாத்திகக் கோட்பாடுகளில் நாட்டம் கொண்டனர் (19) என்றும், தாழ்நிலையில் உள்ளவர்களை உயர்த்த வேண்டும் என்று சிந்திக்காமல், அதற்காகப் பாடுபடுபவர்களை எள்ளி நகையாடும் நிலைக்கு ஆளாவி விட்டனர் (28) என்றும் உள்ளக் குமுறலைக் காட்டியுள்ளனர்.

## சொல்லும் செயலும்

இக்காலக் கொடுமைகளுள் குறிப்பிடத்தக்கதாக

உள்ளது சொல்லுக்கு மாறான நடவடிக்கைகளை மனிதன் மேற்கொள்ளுதல் என்பது தேசிகரின் கருத்தாகும். சொன்னவாறே செயல்படுவது சான்றோரின் இயல்பு. அதற்கு மாறான மக்களே நாட்டில் பெருகிவிட்டதைக் கண்டு புலம்புகிறார் தேசிகர். "ஞானிகளைப் போலப் பேசித் திரிந்து விட்டு அதற்கு நேர்மாறாக நடக்கின்றனர் (11). மாட்டின் மாமிசத்தை உண்டோனைப் பறையன் என இழிவுபடுத்துபவன் மறைவாக முழுமாட்டையே சாப்பிடுகிறான்" என்கிறார் (17). "மனத்துலொன்றும் வாயிலொன்றுமான காலம் (31), காசற்ற உண்மைக் குருக்களைப் போற்றாமல், கள்ளரான குருக்களுக்குத் தொண்டாற்றுகின்றனர்" என்றும் (32), "மனம் போனவாறு கொள்கைகளுக்கு விளக்கக் தந்து கற்றவர்களைப் போல நடிக்கின்றனர்" (33) என்றும் கூறுகிறார்.

## ஏமாற்றும் இயல்பினர்

மக்களை மட்டுமல்ல; மக்கள் தங்களுக்கு முன்னோடிகளாகக் கருதும் குருக்களையே பலர் ஏமாற்றித் திரிகின்றனர் என்கிறார். குருக்களை எப்படி ஏமாற்றலாம் என்பதைக் கற்றுக் கொண்டனர். அவர்களிடம் பெற வேண்டிய நன்மைகளை யெல்லாம் பெற்றுக் கொண்டு, அவர்களையே பழிகூற முற்படுகின்றனர் என்கிறார் (12). போதகர்கள் தங்களுக்குச் செய்த உதவிகளை யெல்லாம் மறந்துவிட்டு, அவர்களைப் பாதகர்கள் என்று கூறத் தலைப்படுகின்றனர் என்கிறார் (16). "போதகர்கள் செய்த நன்மைகளையெல்லாம் மறந்துவிட்டு, பொய்யாக அவர்களின் மீது பழி கூறுகின்றனர்" (26) என்றும், "நல்ல வழிகளைக் கூறுவோரைத் திட்டித்தீர்த்து அவர்களுக்குத் தீமை செய்ய முற்படுகின்றனர்" என்றும், பொது நலத்தை

நாடாதவர்களாக வாழ்கின்றனர்'' 927) என்றும் புண்பட்ட நெஞ்சத்தினராய்ப் புலம்புகிறார்.

## பொருளாசை

பொருளாசை பிடித்தவராக மக்கள் அலைவதைப் படம் பிடித்துக் காட்டுகிறார். நாணத்தை விட்டுவிட்டுப் பொருளொன்றையே குறிக்கோளாகக் கொண்டு வாழத் தலைப்பட்டுவிட்டனர் என்கிறார் (7). பூமியில் வாழ்கின்றபொழுது அவர் வணங்குகின்ற தெய்வமாகத் வயிற்றை மட்டுமே காண்கின்றனர் என்கிறார் (13). பொருளாசை காரணமாக நிலத்தோடு நிலத்தைச் சேர்த்துக் கொள்ள எண்ணி, வழக்குகளைப் போட முற்படுகின்றனர் என்கிறார் (40).

## போலித் தோற்றம்

போலித் துறவிகள் தற்காலத்தில் பெருகிவிட்டதாகத் தற்கால இதழ்களில் வெளிவரும் செய்திகள் காட்டுகின்றன. தேசிகரின் காலத்திலும் அத்தகையோர் உலவி வந்ததை அவருடைய பாடல்களால் அறிய முடிகிறது. வெளியே போட்டிருக்கும் உடைகளின் தோற்றக் கோலத்தைக் கொண்டு துறவிகள் என்று போற்றத் தலைப்பட்டு, உண்மையான துறவிகளை இழிவாகப் பேசத் தொடங்குகின்றனர் என்கிறார் (8). துறவிகளில் மட்டும் வேடம் போட்டு ஏமாற்றவில்லை. அலுவலர்களிலும் அவ்வாறு உள்ளனர். அலுவலைப் பெறுவதற்காகப் பலர் போலிக் கோலம் போட்டுச் சாலம் புரிகின்றனர் (18) என்கிறார்.

## சோதிடமும் சூனியமும்

மக்களை ஏமாற்றுவோருள், சோதிடம், சூனியம் என்று சொல்லி மக்களைத் தடுமாற வைப்போரும் அடங்குவர் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார் தேசிகர். கால நேரம் என்று போலியான கணக்கீடுகளைக் காட்டியும், சோதிடம், மந்திரம், குறிகள் என்று சொல்லியும் வருவதை ஏற்றுப் புறந்தள்ளாததற்குக் கல்வியறிவில்லாத காரணந்தான் என்கிறார் (8). மற்றொரு பாடலில் (16), சோதிடர்கள் மக்களை ஏமாற்றித் திரிகின்ற காலம் எனவும், சூனியம், மந்திரம் என்று சொல்லித் திரியும் காலம் எனவும் வேதனைப் படுகிறார்.

## சீர்திருத்தச் சிந்தனை

தற்காலச் சீர்திருத்தச் சிந்தனைகளைக் கொண்டிருந்தவர் தேசிகர் என்பதை அவருடைய நூல்கள் அனைத்திலும் வெளிப்படுத்துகிறார். கீழ்ச்சாதி என்ற எண்ணத்தில் அவர்களுடைய நலன்களைப் பேணிப் பாதுகாக்காத காலம் என்னும் கருத்தில்,

> "பறையோர்கள் சுகநலத்தை நாடாக் காலம்
> பலஜாதி பேதங்கொண்டா டிகழும் காலம்" (29)

என்று பாடுகிறார். எல்லோரும் ஒன்று என்ற ஒற்றுமையைக் கைக்கொள்ளாக் காலம் என்று அப்பாடலிலேயே தொடர்ந்து கூறுகிறார். விதவைத் திருமணத்தை விரும்பியும், குழந்தை மணத்தை வெறுத்தும்,

"பாரழியச் சிசுமணஞ்செய் பழிப்புக் காலம்
பரிதாபம் விதவைகளைப் படுத்துங் காலம்"
(25)

என்று பாடுகிறார். இதே கருத்தினை வேறோர் இடத்திலும்,

"முண்டுள்ள கட்டாயம் விதவைக் காச்சு
முதிர்விதுரன் சிறவிமணம் முடிக்க லாச்சு" (9)

என்று பாடுகிறார். மற்றொரு பாடலில் மாதர்களுக்குள்ள இழிவைப்பற்றி 'ஓலமிகும் மாதரிழி வகற்றாக் காலம்" (39) என்கிறார்.

இவற்றையெல்லாம் சீர்திருத்தம் என்று கருதியிருக்கிறார் என்பதை, "கருதுசீர் திருத்தமதைச் சிரிக்கும் காலம்" (35) என்று பாடியிருப்பதிலிருந்து உணரலாம்.

## தூய கற்பு

தூய்மையான கற்பு நெறி சீரழிந்து போனதாகக் கவலைப்படுகிறார். "சீர்மைபெறுங் கற்புநெறி சிதைய லாச்சு" (5) என்று பாடுகிறார். மற்றோர் இடத்தில்,

"இல்வாழ்க்கை நெறிபிறழ்ந்து நடக்குங் காலம்
இச்சைமிஞ்சி வேசிகளுக் குழைக்குங் காலம்" (24)

என்று பாடியுள்ளார்.

## மதுவும் மருத்துவரும்

மகிழ்ச்சியடைகிறோம் என்று சொல்லி மதுவைக் குடிக்கிறார்களே என்று அவரது வெறுப்புணர்வைப் புலப்படுத்துகிறார் (38). அதே பாடலில், மருத்துவர் என்று சொல்லி, நோயாளிகளிடம் பணத்தைப் பிடுங்குவதை,

"செய்கிறோம் மருந்தென்று திரியுங் காலம்
திரள்பணத்தை நோயரிடம் பிடுங்குங் காலம்" (38)

என்கிறார்.

## ஒருமைப்பாடு

நற்பணிகளை மக்கள் நாடாத காலமாக இருக்கிறதே என்பதைக் காட்டும் வகையில்,

"ஒருமைக்காய் தேயத்தி லுழைக்காக் காலம்
உழைக்குமதங் குருஜனத்தைப் பழிக்குங் காலம்" (37)

என்று கூறுகிறார்.

## வழக்குச் சொற்கள்

எளிய மக்களும் புரிந்து கொள்வதற்காக எழுதப்பெற்ற நூலாகத் தெரிகிறது. 21 பாடல்களில் ஒவ்வோர் அடியும் இரண்டிடங்களில் 'ஆச்சு' என்னும் சொல் அமையுமாறு பாடியுள்ளார். 'சிறுமி' என்பதற்குப்

பதில் 'சிறவி' (9) என்ற சொல்லைக் கைபாளுகிறார். அதேபோல் சாலம் (18) என ஏமாற்றுதலைக் குறிப்பிடுகிறார். யானையைக் 'காடுதின்போன்' (17) எனச் சுட்டுவது புதுமையாக உள்ளது.

## தாய் மொழிக் கல்வி

தாய்மொழியில் கல்வி புகட்ட வேண்டும் என்ற எண்ணம் தேசிகருக்கு இருந்துள்ளதை,

"வித்தியா கருவங்கள் மிகுந்து போச்சு
விளம்பசுய பாஷையில்வாக் கிலையென் றாச்சு" (10)

என்று சுட்டிக் காட்டுவதால் அறியலாம். இதிலிருந்து அவரது தமிழுணர்வு வெளிப்படுகிறது.



உலகத்தமிழ்ப் பேரவையின் தலைவ ராக
உள்ளவரை வீற்றிருந்து கட்டிக் காத்து
இலகுபல நூல்களெலாம் இயற்றித் தந்தான்
இன்சொல்லான் தயானந்தன் பிரான்சீஸ் என்பான்
நிலவுலகில் வாழும்வரை நன்றி காட்ட
நினைத்தாலும் வாய்ப்பெதுவும் நிகழ வில்லை
பலநாட்கள் ஆனாலும் மறக்க வில்லை
படையலாக இந்நூலைப் படைத்தேன் யானே!